அருள்மிகு கச்சியப்ப முனிவர் இயற்றியருளிய

# திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை




பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன்

கச்சியப்ப முனிவர் இயற்றியருளிய

# திருத்தணிகையாற்றுப்படை -
# தெளிவுரை

தெளிவுரை இயற்றியவர்:

பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன்
எம்.ஏ., பி.எச்.டி.,

வெளியீடு :

அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,
திருத்தணிகை - 631 209.

1999

முதல் பதிப்பு : ஜூன், 1998
இரண்டாம் பதிப்பு : ஜனவரி, 1999
TITLE : TIRUTTANIKAI AATRUPADAI - THELIVURAI
AUTHOR : Dr. S. ULAGANATHAN, M.A., Ph.D.,
PUBLISHED BY : ARULMIGU SUBRAMANYASWAMY, THIRUKKOIL, TIRUTTANI - 631 209.

## இந்நூல் பற்றிய விவரங்கள்

தலைப்பு : திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை
ஆசிரியர் : பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி.,
வெளியீடும், உரிமையும் : அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், திருத்தணிகை.
தாள்கள் : 10.5 கிலோ
பக்கங்கள் : 80
நூல் அளவு : 1/8 கிரௌன்
அச்சகம் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்., இராயப்பேட்டை, சென்னை - 600 014.

## வாழ்த்துகிறோம் !



விலை : ரூ. 15/-

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்,
எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்
பண்பாடு, இந்து சமயம் மற்றும்
அறநிலையத் துறை அமைச்சர்
தி.பி.2029/வைகாசி 19.



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.

நாள் 2-6-1998

## வாழ்த்துரை

''சேயோன் மேய மைவரை உலகம்'' என்ற தொல்காப்பியத் தொடரால், தமிழ்க் கடவுளான முருகனின் பழமையையும், பெருமையையும் தெளியலாம்.

சங்க இலக்கியங்களில் முதல் நூலாக விளங்குவதும் நக்கீரர் அருளிய ''திருமுருகாற்றுப்படை'' எனும் திருமுருகன் நூல்தான் என்பதும் இங்கு நாம் எண்ணி மகிழத்தக்க ஒன்றாகும்.

தமிழ் மொழிக்கு 18 மெய்யெழுத்துக்கள் உள்ளது போல முருகனுக்கு 18 கண்கள் உள்ளன எனவும், தமிழ் மொழிக்கு 12 உயிரெழுத்துக்கள் உள்ளதுபோல முருகனுக்கு 12 தடந்தோள்கள் உள்ளன எனவும், வல்லினம், மெல்லினம், இடையினம் எனத் தமிழில் இன எழுத்துக்கள் ஆறு ஆதலைப் போல முருகனுக்கு அமைந்து விளங்கும் திருமுகங்கள் ஆறு எனவும், தமிழுக்கே உள்ள சிறப்பெழுத்து ஆய்தம் போல், முருகனுக்கு உள்ள சிறப்பு ஆயுதம் வேலாயுதம் எனவும் தமிழனையும் முருகனையும் ஒப்பிட்டுத் தமிழே முருகன், முருகனே தமிழ் எனப்போற்றும் பின்வரும் புலவர் புராணப்

பாடலும் எண்ணி எண்ணி மகிழத்தக்க ஒன்றாகும்.

''கண்நிகர் மெய்யும் சென்னி
　　கணமுறழ் இனத்தின் கூறும்
திண்டிறல் தோள்க ளேபோல்
　　திகழ்தரும் உயிரும் வேறொன்
றெண்ணுதற் கரிய தான
　　எஃகமும் இயலில் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேற்
　　பொற்பதத் தடிமை யாமே''

என்பது தமிழையும் முருகனையும் இணைத்து ஒன்றெனக் காட்டும் ஒப்பற்ற பாடலாகும்.

இவ்வாறு தமிழே வடிவமாகத் திகழும் பேரெழில் முருகனைப் போற்றிடாத தமிழ் இலக்கியங்களே இல்லை எனலாம். அத்தகைய இலக்கியங்களில் மிகச் சிறந்த திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ் நூலையும், திருத்தணிகை ஆற்றுப்படை நூலையும் தமிழ் மக்கள் படித்துப் பயன்பெறும் வகையில் திருக்கோயில் நிர்வாகிகள் வெளியிட்டிருப்பது கண்டு நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்; என் நல்வாழ்த்துக்களை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

(மு. தமிழ்க்குடிமகன்)

**திருமிகு சுகவனேஸ்வர், இ.ஆ.ப.,**
ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 600 034.

## அணிந்துரை

திருமுருகன் வீற்றிருக்கும் ஆறுபடை வீடுகளில் திருத்தணிகை ஐந்தாம் படைவீடாகச் சிறப்பினைப் பெற்று விளங்குகின்றது.

மலர்களில் சிறந்த தாமரையைப் போலவும், நதிகளில் சிறந்த கங்கையைப் போலவும், மண்ணில் விளங்கும் ஊர்களில் சிறந்த காஞ்சியைப் போலவும், மலைகளில் சிறந்து விளங்குவது திருத்தணிகை மலையே என்று கந்தபுராணம் போற்றியுள்ளது இங்கு நாம் நினைந்து மகிழத்தக்க ஒன்றாகும்.

''விரையிடங் கொளும் போதினுள்
மிக்க பங்கயம் போல்
திரையிடங் கொளும் நதிகளில்
சிறந்த கங்கையைப் போல்
தரையிடங் கொளும் பதிகளில்
காஞ்சியந் தலம் போல்
வரையிடங்களில் சிறந்தது
இத்தணிகைமால் வரையே''

என்பது கச்சியப்ப சிவாச்சாரியார் அருட்பாடலாகும்.

தீயவர்க்கும் அருள்புரியும் பன்னிருகை வள்ளலாகிய முருகன் திருத்தணிகை வந்து தம்மை வழிபடும் மெய் யன்பர்களின் பாவங்கள் அனைத்தையும் போக்கி அவரைத் திருமாலினும், நான்முகக் கடவுளிலும் மேலாக்கி அருள்

புரியும் திருவருளைத் திருமுருகன் வாக்காகவே வைத்துக் கந்தபுராணம் கூறும் பாடல் இது.

''பாதகம் பல செய்தவர் ஆயினும் பவங்கள்
ஏதும் வைகலும் புரிபவர் ஆயினும் எம்பால்
ஆதரங் கொடு தணிகை வெற்பு அடைவரேல் அவரே
வேதன் மாலினும் விழுமியர் எவரினும் மிக்கார்''

இத்தகைய இணையில்லாத் திருத்தலமாம் திருத்தணிகை முருகன் மேல் இயற்றப்பட்ட இலக்கியச் செல்வங்கள் ஏராளமாக உள்ளன. அவற்றுள் கந்தப்பையர் அருளிச் செய்துள்ள திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ் நூலையும் கவிராட்சச கச்சியப்ப முனிவர் அருளியுள்ள திருத்தணிகை ஆற்றுப்படை நூலையும் மெய்யன்பர்கள் அனைவரும் படித்துப் பயன் பெறும் வகையில் திருத்தணிகை ஆலய நிர்வாகிகள் சிறப்புற அச்சிட்டு வெளியிடுவது அறிந்து நான் மிகுந்த மனமகிழ்ச்சி அடைகின்றேன்.

திருத்தணிகை அரசினர் கலைக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள பேராசிரியர் டாக்டர் உலகநாதன் அவர்கள் இவ்விரு நூல்களுக்கும் மிகச் சிறந்த தெளிவுரையும் விளக்கமும் எழுதி இருப்பது பாராட்டிற்குரியது.

மெய்யன்பர்கள் அனைவரும் இந்நூல்களைப் படித்துத் ''தணிகையில் இணையிலி'' யாக விளங்கும் திருமுருகன் திருவருளைப் பெற்றுய்யுமாறு அன்புடன் வேண்டுகின்றேன்.

அன்புள்ள,
சுகவனேஸ்வர், இ.ஆ.ப.

இணை ஆணையர்.
திருமிகு மு.க. பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.,
அருள்மிகு சுப்பிரணியசுவாமி திருக்கோயில், திருத்தணி
அவர்களின்,

'திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை'

## நூல் துய்ப்புரை

தணிகையம்பதியில் தோன்றிய கச்சியப்ப முனிவர் இயற்றிய 'திருத்தணிகையாற்றுப்படை' என்னும் நூலுக்கு எளிய இனிய தமிழில் தெளிவுரை எழுதி உதவுமாறு பேரா சிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி., அவர் களைக் கேட்டுக் கொண்டேன். அவர் விரைந்து செயல்பட்டார்; ஐந்தே நாட்களில் 'திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை'' என்னும் தலைப்பில் அரிய இனிய தெளிவுரை இயற்றி முடித்தார்.

வீடுபேறு அடைய விரும்பும் ஒருவனை வீடுபேறு அடைந்த ஒருவன் தணிகை மலையில் வீற்றிருக்கும் முருகனிடம் ஆற்றுப்படுத்தியதாக அமைந்த 318 வரிகளைக் கொண்ட நூல், திருத்தணிகை ஆற்றுப்படை' என அமைந்தது.

விநாயகர் காப்பு என்னும் தலைப்பில் அமைந்த வெண்பா வாயிலாக,

''ஏரார் தணிகை'' என்று திருத்தணிகையின் நிறைந்த அழகு போற்றப்பெறுகிறது. தெளிவுரை இயற்றிய ஆசிரியர் திரு. உலகநாதன் அவர்களும், ''தணிகைமலை அருவிகளும் சோலைகளும், நிரம்பப்பெற்று அழகுநிறைந்து விளங்கிய தனை 'ஏர்ஆர்' என்னும் தொடர் உணர்த்துகிறது. ஏர் - அழகு; ஆர்- நிறைந்த'' என்று தெளிவான விளக்கம் அளித்துள்ளார்.

''பொருளெனும் வெறுக்கை போற்றாது நழுவவும்'' என்னும் தொடருக்கு, ''பொருள் என்னும் செல்வத்தைப் போற்றிப் பாதுகாக்காமல் நழுவிச் செல்லவும்'' என்று தெளிவுரை இயற்றி, ''வெறுக்கை - செல்வம். செல்வம் ஒரே இடத்தில் நில்லாமல் செல்லக்கூடியது; எனவே, அதன் மீது பற்று வைக்காமல் வெறுக்க வேண்டும் என்னும் பொருளுடன் 'வெறுக்கை' என்னும் சொல் அமைந்துள்ளது'' என நல்லதொரு விளக்கமும் அளித்துள்ளார். (பக்கங்கள் 7, 8).

'சரியை', 'கிரியை', 'யோகம்' ஆகிய சைவ சித்தாந்தக் கோட்பாடுகளுக்கு விளக்கங்கள் தரப்பெற்றுள்ளன. (பக்கம் : 20)

'' 'புணராதுபுணர்தல்' என்பது, ஒரு சமயம் நீங்கிப் பின்னர் கூடாமல் இடையறக்கூடல், இவ்வாறு கூடுவதற்குக் கருவியாக அமைவது நிட்டையாகும்'' என நிட்டைக்குரிய விளக்கமும் தரப்பெற்றுள்ளது. (பக்கம் : 25)

ஆசிரியர் உலகநாதன் அவர்கள் சில பாடல் வரிகளுக்குத் தக்க முறையில் திருக்குறள் பாக்களையும் ஆங்காங்கு ஒப்பீடாகத் தந்துள்ளார். எடுத்துக்காட்டு:-

''இரண்டறு கலப்பின் இன்பநச்சுநர்''

என்னும் தொடர், தான்வேறு இறைவன்வேறு என்னும் வேறுபாடு நீங்க இறைவனுடன் ஒன்றுகின்ற பேரின்ப நிலையை உணர்த்துகிறது. இந்நிலை ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் கைவிட்ட பிறகே வந்தடையும்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்'' (குறள் : 50)

என்னும் குறள் இரண்டற இறைவனுடன் கலக்கும் பேரின்ப உயர்வைக் குறிப்பதும் இங்கு ஆயத்தக்கதாகும்'' *(பக்கங்கள் : 33, 34)*

''வைகல் வைகல் மலர் மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது''

என்னும் வரிகளுக்கு, தெளிவுரை இயற்றிய ஆசிரியர், ''காலை, நடுப்பகல், மாலை'' என்னும் முப்பொழுதுகளிலும் நாள் தோறும் மூன்று மலர்கள் வீதம் மலர்கின்ற நீலோற்பல மலர்கள் பூக்கும் பசிய சுனையை நேரில் கண்டு வணங்கி'' எனப் பொருள் தந்துள்ளார். (பக்கம் : 35)

விருப்பு வெறுப்பற்ற இறைவன் தன்மையை, 'பந்தம் வீடுபடாத பெருந்தகை' என்னும் தொடர் மூலம் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார்:-

''பந்தம் வீடுபடாத பெருந்தகை' என்றதனால் இறைவன், எல்லா உயிர்களையும் படைத்துப் பந்தம், வீடு ஆகியவற்றுள் அழுந்தச் செய்தாலும், தான் அவ்வாறு அவற்றிற்கு ஆட்படாத் தனித்தன்மையுடையவன். அதனால்தான் வள்ளுவர், 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்றார்.'' *(பக்கம் : 52).*

ஆன்மீகப் பெருமக்களும் தமிழ்ப் பெருமக்களும் இந்நூலினைப் படித்துத் திருமுருகன் அருள் பெற்றுப் பேரின்பப் பெருவாழ்வு வாழ வேண்டுகின்றேன்.

அன்புள்ள,

**மு.க. பாலசுப்பிரமணியன்,** பி.ஏ., பி.எல்.
இணை ஆணையர்.

## பதிப்புரை

'திருத்தணிகையாற்றுப்படை' என்னும் இலக்கியச் சுவையும் தணிகையின் பெருமையும் பொதிந்த இவ் ஆற்றுப்படை நூலினை இயற்றியவர் தணிகைப்பதியில் தோன்றிய கச்சியப்ப முனிவர் ஆவார். பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும்புலவர் அவர். ஆற்றுப்படை நூல்களுள் முருகன் பெருமைகளை உணர்த்திய சங்க இலக்கிய நூல் நக்கீரரால் இயற்றப்பெற்ற 'திருமுருகாற்றுப்படை' என்பதாகும். அந்நூலுக்கு இணையாகத் திருத்தணிகை யாற்றுப்படை விளங்குகிறது. இந்நூல் புலமைச் செருக்குடன் இயற்றப் பெற்ற அருஞ்சொற்களைக் கொண்டது; எளிய நடையில் நல்ல தமிழில் இயற்றினால் அனைவரும் படித் துணர முடியும் என்னும் எண்ணத்தில்தான், 'திருத்தணிகை யாற்றுப்படை - தெளிவுரை' என்னும் இந்நூல் வங்கனூரில் பிறந்து திருத்தணிகையில் வாழும் பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி., அவர்களால் இயற்றப் பெற்றது.

இந்நூலினை உலகம் முழுவதும் தணிகை முருகன் பெருமையையும் கச்சியப்ப முனிவரின் பெரும் தமிழ்ப் புலமையாற்றலையும் அறியும் பொருட்டு, அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலார் மகிழ்ச்சியுடன் வெளி யிடுகின்றனர்.

தமிழ்ப்பெருமக்களும் முருகன் அடியார்களும் இந்நூலினை வாங்கிப் படித்து மகிழ்ந்து தணிகை முருகன் இன்னருள்பெற வேண்டுகிறோம்.

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி
திருக்கோயிலார்,
திருத்தணிகை

*நாள்: 9-6-1998,*
திருத்தணிகை

# கச்சியப்பர் வரலாற்றுச் சுருக்கம்

கச்சியப்ப முனிவர் தமிழகத்தின் வட எல்லைப் பகுதியில் அமைந்துள்ள திருத்தணிகையில் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர். பதினெட்டாம் நூற்றாண்டில் ஈடு இணையற்ற கவிக்கொண்டலாக விளங்கிய மாபெரும் புலவர்.

பல சிவத்தலங்களையும் சென்று வழிபட்ட நிலையில் திருவாவடுதுறை ஆதீனத்தை அடைந்து, ஞானாசிரியராக விளங்கிய பின்வேலப்ப தேசிகரிடம் சைவ சந்நியாசமும் சிவதீட்சையும் பெற்ற கச்சியப்பர் வடமொழி தென்மொழி ஆகியவற்றுள் மாபெரும் புலமைபெற்றுத் திகழ்ந்த சிவஞான யோகிகளிடம் இலக்கண இலக்கியங்கள், தருக்கம், பதினான்கு மெய்கண்ட நூல்கள், பதினான்கு பண்டார நூல்கள் முதலிய பல நூல்களைக் கற்றார்; சிவஞான யோகிகளின் பன்னிரு மாணவர்களுள் தலைமாணாக்கராகக் கச்சியப்பர் சிறந்தார். கவிச்சக்கரவர்த்தி என்று புகழத்தக்க உயரிய நிலையை அடைந்தார்.

திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப் புராணம் முதலியவற்றை இயற்றினார். திருத்தணிகையையடைந்த கச்சியப்ப முனிவர் மிகச்சிறந்த தல புராணமாகத் திருத்தணிகைப் புராணத்தை இயற்றியருளினார்.

கச்சியப்ப முனிவரின் சிறந்த மாணாக்கராக விளங்கிய கந்தப்பையருக்கு வயிற்றில் குன்ம நோய் தோன்றியது.

'தணிகையாற்றுப்படை' என்னும் ஒப்பற்ற நூலைப் பாடி: தம் மாணாக்கர் நோயினைத் தீர்த்ததாகச் சொல்வர்.

சென்னைக்குச் சென்று விநாயக புராணம் இயற்றி அரங்கேற்றம் செய்தார். அரங்கேற்றம் காணவந்த பெருஞ் செல்வர் ஐயாப்பிள்ளை என்பவர் கச்சியப்ப முனிவருக்கு நூறு வராகனும் உயரிய பீதாம்பரமும் வழங்கினார். அன்பளிப்பாக இரண்டாயிரம் வராகனும் சேர்த்துத் தந்தார். அவற்றை அப்படியே திருவாவடுதுறை ஆதீன நமச்சிவாய மூர்த்திகள் சந்நிதி மண்டபத் திருப்பணிக்குப் பயன்படுத்தினார்.

காஞ்சிபுரம் சென்ற கச்சியப்பர் ஆசிரியர் பெருமான் சிவஞான முனிவரின் ஆணையை ஏற்று அவர் இயற்றிய காஞ்சிபுராணத்தின் இரண்டாம் காண்டம் இயற்றியருளினார். மேலும் காஞ்சி மாநகரில் வாழ்ந்த காலத்தில், கச்சியானந் தருத்திரேசர் வண்டுவிடுதூது, கச்சியானந்தருத்திரேசர் பதிற்றுப் பத்தந்தாதி, பஞ்சாக்கரவந்தாதி, திருத்தணிகைப் பதிற்றுப் ப்த்தந்தாதி ஆகிய நூல்களையும் இயற்றித் தமிழுக்கும் சைவ சமயத்திற்கும் தூணாக மிளிர்ந்தார்.

கச்சியப்ப முனிவர் காஞ்சியில் சாலிவாகன சகாப்தம் 1712க்குச் சரியான சாதாரண ஆண்டு, சித்திரைத் திங்கள் 11 ஆம் நாள் இயற்கை எய்தினார்.

★ ★

# ஆசிரியர் உரை

தணிகை முருகன் அருள்பெறும் பேறு பெறுதற்கு என்றே, அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் இணை ஆணையர் திருமிகு மு.க. பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்கள், 'திருத்தணிகையாற்றுப்படை', 'திருத்தணிகை பிள்ளைத்தமிழ்' ஆகிய இரு நூல்களுக்கும் தெளிவுரை எழுதி அச்சுப்பணியையும் முடித்துத் தருமாறு என்னைப் பணித்தார்.

தட்டாமல் ஒப்புக்கொண்டேன்; எழுத முயன்றேன், முடித்தேன்.

இந்நூல்கள் இயற்றும்போது, தெளிவுரையும் விளக்கமும் செம்மையாக அமைய அரும்பாடுபட்டேன்.

சென்னையில் உள்ள பாவை அச்சகத்தார் சிறப்புற அச்சியற்றித்தந்னர்.

தவத்திரு கச்சியப்பர் மற்றும் தவத்திரு கந்தப்பர் ஆகிய இருபெரும் புலவர் பெருமக்களின் திருவடிகளையும் வணங்கி மனமலரில் நிறுத்தி அவர்தம் மாணறிவையும் நுண்மாண் புலமையையும் சிறியேனாகிய யான் மெச்சிப்போற்றுகிறேன்.

தமிழ்ப்பெருமக்களும் முருகனடியார்களும் இவ் இரு நூல்களையும் படித்து இன்பம் நுகர வேண்டுகிறேன்.

வாழ்த்துரை வழங்கிய மாண்பிற் சிறந்த

அமைச்சர் தமிழ்க்குடிமகனார் அவர்கட்கும், ஆணையர் உயர்திரு. ச. மெய்கண்ட தேவன், இ.ஆ.ப. அவர்கட்கும் இணை ஆணையர் திருமிகு மு.க. பாலசுப்பிரமணியன், பி.ஏ., பி.எல்., அவர்கட்கும், அருள் மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் மற்றும் உறுப்பினர்களுக்கும் என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள் கின்றேன். எனக்கு உதவிய திருக்கோயில் ஊழியர்களுக்கும் என்னை ஊக்கிய அன்பு மாணவர், 'திருக்கோயில்' ஆசிரியர் முனைவர் அமிர்தலிங்கம், எம்.ஏ., பி.எச்.டி., அவர்கட்கும் நன்றியுடையேன்.

9-6-98 அன்பன்,

திருத்தணிகை செ. உலகநாதன்.

# திருத்தணிகையாற்றுப்படை – தெளிவுரை

## விநாயகர் காப்பு

### நேரிசை வெண்பா

*பாடல்*

சீரார் தொடைபுனைந்த செம்பாவை முன்புபோ
லேரார் தணிகை இளவற்கு - நேராகக்
கூட்டுமால் வேற்றுருவங் கொள்ளாமை எப்பொருளும்
காட்டுமா லைங்கைக் களிறு.

*தெளிவுரை*

ஐந்து கைகள் கொண்ட யானை, முன்நாள்போல் வேறுவடிவம் கொள்ளாமல், அழகு நிறைந்த திருத்தணிகையில் உள்ள இளவலாகிய முருகனுக்குச் சீர்நிறைந்த தொடைகளால் புனையப்பெற்ற செம்மையான பாடலை, நேராகக் கூட்டுவித்து எத்தகைய பொருளையும் உணர்த்தும்.

*விளக்கம்*

'ஐங்கைக்களிறு' என்னும் தொடர் முருகனுடைய தமையன் விநாயகரைக் குறிக்கிறது.

தணிகைமலை அருவிகளும் சோலைகளும் நிரம்பப் பெற்று அழகு நிறைந்து விளங்கியதனை 'ஏர்ஆர்' என்னும் தொடர் உணர்த்துகிறது. ஏர் - அழகு; ஆர் - நிறைந்த.

முன்னர் முருகனுக்கு வள்ளியை மணமுடிக்கும் பொருட்டு விநாயகர் யானை வடிவம் கொண்டார். 'வேற்று வடிவம் கொள்ளாமை' என்னும் தொடர் யானை வடிவம் கொண்ட விநாயகர் பிறகு அத்தகைய வேறு வடிவம் கொள்ள வில்லை என்பதை உணர்த்துகிறது. 'சீர்ஆர் தொடைபுனைந்த செம்பாவை' என்னும் தொடர், ''அழகு நிறைந்த மாலை புனைந்த செம்பாவை போன்ற வள்ளி'' என்னும் பொருளை யும் தருகிறது.

### பாடல்

பொன்மலைத் திருவிற் பன்னக நெடுநாண்
மாயப் பகழித் தாயக் குரிசின்
முரணமை யிருகாற் றிரண்மறைப் புரவி
யலர்மரை வாழ்க்கை வலவத் தேரும்
வழங்குதற் கமையா வண்மையி னிசைக்கும்
பெருந்தகு பாடற் றிருந்திசைப் புலவ
ரறன்கடைக் ககலாப் பிறங்குதம் முளத்திற்
சாலாக் கல்வி மாலார்க் ககலா
வரன்மாண் டமைந்த வுரன்மாண் பலகையிற்
றண்டா விருப்பி னெண்டோண் முதல்வனோ
டானாது பயிலிய வருமறைக் கேள்வி
மாயிருந் தமிழ்க்கடல் வடமொழிக் கடலென்
றாயிரு கடலு மாற்றலிற் கடையா
ஐயந் திரிபெனும் மழல்விடம் படாது

வெய்யசெம் பொருளெனு மிளிர்தீஞ் சுதைத்திர
னாராக் காதலி னாராது கைப்பவு

*(வரிகள் 1-16)*

## *தெளிவுரை.*

மேருமலையாகிய அழகிய வில்லுக்கும் ஆதிசேடனாகிய நீண்ட வில்கயிறாகிய நாணிக்கும் திருமாலாகிய அம்பிற்கும் உரிமையுடைய இறைவனாகிய சிவபெருமானுடைய முரண்பட அமைந்த நிலவும் கதிரவனும் ஆகிய இரு சக்கரங்களையும் நான்கு மறைகளாகிய குதிரைகளையும், மலர்ந்த தாமரை மலரில் வாழும் பாகனாகிய நான்முகனையும் கொண்ட தேரும், கொடுப்பதற்கு முடியாத வள்ளல் தன்மையைப் போல் இசைக்கப்படும் பெரும் தகுதியமைந்த பாடலின் திருந்திய பெருமையுடைய புலவரது பாவச் செயலுக்கு அறத்தைவிட்டுச் செல்லாத தெளிந்த தம் மனத்தையொத்த, நிரம்பாத மயக்கமுடையவர்களைச் சேர்ந்திருக்க, நீங்காத வரங்களால் பெருமை அமைந்த புலமையின் பெருமையுடைய சங்கப் பலகையில், நீங்காத விருப்பத்தையுடைய எட்டுத்தொகைகளையுடைய முதல்வனாகிய இறைவனுடன் இடைவிடாமல் பயின்ற அரிய மறைகளைக் கேட்டருளிய இன்பத்தையும், மிகப்பெரிய தமிழ்க்கடல், வடமொழிக்கடல் என்னும் இரு கடல்களையும் அறிவாகிய மத்தினால் கடைந்து, ஐயம், திரிபு என்னும் நெருப்பாகிய நஞ்சுபடாமல், செம்பொருள் என்னும் பெருமைக்குரிய இனிய அமிழ்தத் திரட்சியையும் நிறையாத விருப்புடன், நுகராமல் வெறுக்கவும்.

### விளக்கம்

பொன்மலை - மேருமலை
'அலர்மரை' - மலர்ந்த தாமரை மலர்

முப்புரங்களை அழிப்பதற்காகச் சிவபெருமான் சென்றபோது மேருமலையை வில்லாகவும் பன்னகமாகிய ஆதிசேடனை நாணியாகவும் மாயனாகிய திருமாலை அம்பாகவும் கொண் டான். எனவே, ''பொன்மலைத் திருவில் பன்னகை நெடு நாண், மாயப்பகழித் தாயக்குரிசில்'' எனச் சிவபெருமான் போற்றப் பெறுகின்றார்.

'மாலார்' - மயக்கமுடையோர். நிறைந்த கல்வி அறிவு இல்லாமையால் ஏற்படும் மயக்கமுடையோர்.

'உரன் மாண்பலகை' என்பது, புலவர்களின் புலமைத் திறனை அறிதற்குக் காட்டும் தன்மையுடைய சங்கப் பலகை.

'எண்தோள் முதல்வன்' - எட்டுத் தோள்களையுடைய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்.

### பாடல்

மூன்றுவிர லமுந்தா துடறசை திணிந்து
கான்றதேந் தெரியற் கருங்குழன் மகளிர்க்
கணங்குள நிறீஇ யாருயிர் கவர்க்கும்
வளங்கவின் கொழிக்கும் விளங்குசீ ரிளமையும்
பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று
சிந்தை வழிச்செலு மைந்துநிலை பெறீஇய
ரளவினைத் திறத்தி னயரா யாக்கையு

மளகைக் கோமா னுளமழுக் கறுப்ப
நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வமு
நீடின் றிரியு நிலைமை நாடி
யேற்போ ரங்கைக் கொடைக்கட னிறுத்து
நோற்போர் நோற்கும் நோன்மைசா லறனெனு
முறுதி யாக்க மொய்யெனக் கழலவும்

*(வரிகள் 17-29)*

## *தெளிவுரை*

**ஊன்றிய விரல்கள் அழுந்தாதபடி உடலின் தசை வலிமையுடையதாய், மணம் வீசும் தேன் பொருந்திய மாலையுடைய கருங்கூந்தல் கொண்ட பெண்களிடத்து அச்சம் பொருந்திய உள்ளத்தை நிறுத்தி, அரிய உயிரைக் கவரும் வளமும் அழகும் விளங்குகின்ற சிறப்பான இளமையும், பலவகையான தொழில்களையும் பண்புடன் சொல்லி, மனம் வழியே செல்லும் ஐம்பொறிகளையும் அவற்றின் நுகர்ச்சி களாகிய தொட்டுணர்தல், சுவையுணர்தல், கண்டறிதல், உயிர்த்தல், கேட்டறிதல் ஆகிய ஐந்தனையும் அவித்த சான்றோர்களின் ஒழுக்க நெறியினின்றும் சோர்வடையாத உடலும், அளகாபுரி மன்னனாகிய குபேரன் மனமும் பொறாமை அடையுமாறு உலகிலுள்ளோர் உண்ணுதற்காகக் கிடந்த மிகுந்த பொருள் செல்வமும், நிலையில்லாமல் நீங்கும் நிலைமையை ஆய்ந்து, பிச்சை ஏற்போர் உள்ளங்கையில் கொடுக்கும் கொடைக் கடமையைச் செய்து, வள்ளல் தன்மையுடையோர் தவமாக மேற்கொள்ளும் தவத்தன்மை அமைந்த அறன் என்னும் உறுதியாகிய ஆக்கம் நீங்குக என நீங்கவும்,**

—

***விளக்கம்:***

கான்றல் - மணம் கமழ்தல்
நிறீஇ - நிறுத்துதல்

'ஐந்தும் நிலை பெறீஇயர்' என்னும் தொடர், மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளையும் அவற்றின் நுகர்ச்சிகளையும் அவித்துத் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் சான்றோரைக் குறிக்கிறது.

திறத்தின் - திறமைக்கு ஏற்ப.

'அளகைக்கோமான்' - அளகை - அளகாபுரி, இது குபேரனின் தலைநகரம். 'கோமான்' என்னும் சொல் செல்வத் திற்குரிய குபேரனைக் குறிக்கிறது.

இரிதல் - கெடுதல், நீங்குதல்
அங்கை - அகங்கை, உள்ளங்கை
'ஒய்' - 'நீங்குக' என்னும் பொருள் கொண்ட சொல்.
'இன்றி' - 'இன்று' எனத் திரிந்தது.

***பாடல்***

வரைத்திரள் புரள்விற் றிரைத்தெழுந் திரைக்கணம்
விலங்கின வழங்கும் விழுக்கலன் செறித்து
மொளிறுவே லமுவத் துருத்தெழுந் தடர்த்துக்
குளிறுவார் முரசும் பிளிறுமால் யானையும்
வைத்தபல் படையும் வழாதுகைக் கொண்டு
பராபவத் தெவ்வர் வரிசையி னிறுக்கும்
திறைகே ழுரிமை முறைநேர் நடாவியும்

தத்தந் தொழிலிற் றலைநின்று வளர்க்கும்
பொருளெனும் வெறுக்கை போற்றாது நழுவவும்
மிஞிறுந் தேனும் வெறிகவர் தும்பியும்
கஞலிப் பட்குரல் கஞற்றுவ சுழலும்
இருடுஞ்சு மலர்ப்பொழின் மருள்சில் லோதிப்
பூவார் சோலைப் புறத்தகப் படுத்து
மேவரத் தடைஇய விதுக்குறை கடுக்கும்
திவவொளி மாண்ட குவவுநுதல் வாணுதல்

*(30-44)*

### *தெளிவுரை*

மலைத் தொகுதிகள் புரள்வதனைப் போல் வரிசையாக எழும் அலைகளின் கூட்டம் விலகிச் சிறந்த கப்பல்களில் சென்று பொருள் ஈட்டியும், ஒளி செய்யும் வேல் படைகள் உடைய போர்க்களத்தில் அச்சமூட்டி எழுந்து போரிட்டு, பகைவர்களுடைய அலறும் வார்பிணைத்த முரசுகளையும் பிளிறும் பெரிய யானைகளையும் வைக்கப்பெற்ற பலவகைப் படைகளையும் தவறாமல் கைப்பற்றத் தோல்வியடைந்த பகையரசர்கள் வரிசையாக வந்து அளிக்கும் திறைப் பொருளைப் பெறும் ஆட்சியினை முறையாகச் சிறப்புற நடத்தியும், அமைச்சர் முதலானோர் அவரவர் கடமைகளில் தலைமை ஏற்றுப் பெருக்குகின்ற பொருள் என்னும் செல்வத்தைப் போற்றிப் பாதுகாக்காமல் நழுவிச் செல்லவும், ஆண் வண்டும் பெண் வண்டும் மதுவைக் கவரும் தும்பியும், எழுச்சியான இசையொலி எழுப்பி வட்டமிடுகின்ற இருள்தங்கிய பூஞ்சோலையோ என்று மயங்கத்தக்க சில முன்

உச்சி மயிர் கொண்ட கூந்தலாகிய மலர்கள் நிறைந்த சோலைக்கு வெளியே அதனை உள்ளடக்கிக் கொண்டு தடை செய்த பிறை நிலா (பிறைமதி) போன்ற ஒளிபரவிய மாட்சிமையுடைய குறுகிய நெற்றியினையும்,

### விளக்கம்

குளிறுவார் முரசும் - அலறும் வார் கட்டிய முரசு

'பல்படை' என்பது, தேர், குதிரை, யானை, காலாள் முதலிய படைப் பிரிவுகளைக் குறிக்கும் தொடர்.

பராபவம் - தோல்வி

தெவ்வர் - பகைவர்

நடாவி - ஆட்சி நடத்தி, பேரரசையாண்டு

வெறுக்கை - செல்வம். செல்வம் ஒரே இடத்தில் நில்லாமல் செல்லக் கூடியது; எனவே, அதன்மீது பற்று வைக்காமல் வெறுக்க வேண்டும் என்னும் பொருளுடன் 'வெறுக்கை' என்னும் சொல் அமைந்துள்ளது.

மிஞிறு - ஆண்வண்டு தேன் - பெண்வண்டு

சில்ஓதி - சிலவாகிய பெண்களின் முன் உச்சி மயிர்த் தொகுதி.

குவவுநுதல் - குறுகிய நெற்றி

### பாடல்

தீங்கதி ரமிழ்தத் திங்கட் பிளவி
னீங்குகார்க் கறையு நிலாத்தவழ் வெண்மையும்
விராயுருக் கொண்டென மிளிர்மதர் மழைக்கட்
செங்குமு தத்துச் சிறுமதி கிடந்தெனச்
செவ்வா யகத்த செயிர்தீர் வெண்பல்
விலங்குபாய் கதிர்க்குழை வீழ்ந்துசெகிற்று யல்வர
வள்ளையி னொழுக்கிய வள்ளெழிற் செஞ்செவி
செவ்வாய் கவுட்டுணைச் சேல்விழி நெற்றி
யிவ்வா யுறுப்பா னின்சுவை யமிழ்த
வுறுகொடை யாற்றி வறிது கொடை காட்டும்
வளைநிதி தன்னைக் குடுமிகைக் கொண்டவ்
வளைமேல் கொண்டு வயங்கொளி தோற்றும்
பதும மாநிதி யிதுவெனக் கவன்று
தாவா வுறுவர் மேவா வுள்ளமு
மோவப்படமென்ன வுருற்றுறுதிருமுகப்

*(45-59)*

### தெளிவுரை

இனிய கிரணங்களைக் கொண்ட அமிழ்தமாகிய அப்பிறை நிலவில் இருந்து, நீங்கிய கரிய கறையும் (களங்கம்) நிலவில் தவழும் வெண்மையும் கலந்து வடிவம் கொண்டது எனச் செருக்கடைந்த குளிர்ந்த கண்ணையும், சிவந்த குமுத மலரில் சிறுநிலவு கிடந்தது என்று சொல்லும்படி, சிவந்த வாயிடத்து அமைந்த தூய்மையான பல்லையும் விலகிப் பரவுகின்ற ஒளிரும் குழை விழுந்து, தோளின்மீது அசையவும்,

வள்ளை மலரைப் போல் தொங்கிய அள்ளும் அழகுடைய செம்மையான காதினையும், சிவந்த வாயும், இரு கன்னங் களும், சேல்மீன் போன்ற கண்களும், நெற்றியும் ஆகிய உறுப்புக்களைக் கொண்டு இனிய சுவையுள்ள அமிழ்தமாகிய மிக்க ஈகையைச் செய்து வறிய ஈகையைக் காட்டும் சங்க நிதியின் குடுமியைக் கைப்பற்றி, அதன் வளைக்குமேல் எடுத்துக் கொண்டு மிகுந்த ஒளியைக் காட்டும் மாபெரும் பதுமநிதி இதுதான் என்று விரும்பி, கேடில்லாத தவமுனி வர்களின் பற்றற்ற உள்ளமும் ஓவியப் படமென நான்முகனால் படைக்கப்பட்ட அழகிய முகமும்

***விளக்கம்***

விராய் - விரவி, கலந்து

மதர் - செருக்கிய

செய்தீர் வெண்பல் - தூய அழுக்கற்ற வெண்மையான பல்

பதுமமாநிதி - கோடானுகோடிப் பொருள்

***பாடல்***

பகுவாய்ப் பொற்குழை மகரமீ னாஅன்
றைதுமீக் கிடத்தலி னைங்கணைக் கிழவோன்
வெய்துதன் னாணை விளக்கிய வுயர்த்த
வணங்குதவழ் கொடியி னிணங்குபணை வேய்த்தோட்
காம்புபுடை யடுத்த கதிர்மணிக் குன்றின்
தோள்புடை யடுத்த சுடர்ப்பூட் கொங்கை
குவிமுலைத் துணைகொள் சவிமணி மார்பிற்

றத்தம தேணி கடவாது தணிய
நள்ளுநின் றுணர்த்துந் தள்ளாக் குறியி
னணிவயிற் றொழுகிய மணிமயிர் வல்லி
நெடுமயி ரொழுக்கு நெடுவழிப் படர்ந்து
கடுமுலைக் கோட்டுக் களிறுபட வெடுத்த
படுகுழி யனைய பயம்படு கொப்பூழ்
நடுநின்று வாழ்வோர் நலத்தொடு முரண
நடுநின்று தேய்ந்த விடுகுகொடி மருங்குல்

*(60 - 74)*

## *தெளிவுரை*

பிளந்த வாயையுடைய சுறாமீன் வடிவில் அமைந்த பொன்னால் ஆகிய குழை தொங்கி அழகாக மூங்கில் போன்ற தோளின் மீது கிடத்தலால், ஐந்து மலரம்புகளைக் கொண்ட மன்மதன் எய்து தன் ஆணையை நிலைநாட்டிய அழகு தவழும் கொடியினுக்கு இணையான பருத்த மூங்கில் போன்ற தோள்களையும், மூங்கில் காம்பின் பக்கம் அடுத்து இருந்த ஒளிபொருந்திய மணிக்குன்றம் போன்ற தோள்களின் பக்கம் அடுத்து இருந்த சுடரும் ஒளியுள்ள அணிகலன்கள் பூண்ட முலைகளைக் கொண்ட மிகுந்த அழகிய மார்பில், தமது எல்லைகளை மீறாமல், தணிந்து நடுநின்று உணர்த்துகின்ற நீக்காத அடையாளம்போல அழகிய வயிற்றில் ஒழுங்காக அமைந்த அழகிய மயிர் அளவும், நீண்ட மயிர் ஒழுங்கின் நெடுவழியில் படர்ந்து யானைகள் அகப்படும்படித் தோண்டிய தந்தங்களுடைய கொப்பம் போன்ற ஆழமான உந்தியையும், நடுநிலைமையுடன் நிலைத்து வாழ்வோரின் நன்மையோடு முரண்பட்டு நடுவில் நின்று மெலிந்த சுருங்கிய கொடியைப் போன்ற இடையையும்,

***விளக்கம்***

பகுவாய் - பிளந்த வாய்

நான்று - தொங்கி

மீ - மேலே

மன்மதன் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே காம உணர்ச்சி ஊட்டும் பொருட்டு ஐந்து மலரம்புகளை எய்பவன் என்னும் பொருளில், மன்மதனைக் குறிக்க, 'ஐங்கணைக் கிழவோன்' என்னும் தொடர் அமைக்கப் பெற்றது.

அணங்கு = அழகு

வேய்த்தோள் = மூங்கில் போன்ற தோள். அழகிய பெண்களின் தோள்களை மென்மையான மூங்கிலுக்கு ஒப்பிடுதல் புலவர் வழக்கம்.

மன்மதன் மகரக்கொடியை யுடையவன். 'மகரம்' சுறாமீனைக் குறிக்கும்.

யானைகளைப் பிடிக்கக் காட்டில் ஆழமான குழிகளை வெட்டி அமைப்பர்; யானையை வீழச் செய்து பிடிக்கப் பயன்படும் குழியைப் போன்றது அழகியின் உந்தி என்பது சிறந்த உவமையாகும். ''கடுமுலைக்கோட்டுக் களிறுபட எடுத்த படுகுழி அனைய பயம்படு கொப்பூழ்'' எனச் சங்கப் புலவர் போன்று, கச்சியப்பர் அழகியின் கொப்பூழ் அமைப்பை உணர்த்த அழகிய தொடரை நயத்துடன் பயன்படுத்தியுள்ளார்.

இடுகுகொடி மருங்குல் - சுருங்கிய கொடி போன்ற இடை.

சான்றோரின் நடுவுநிலை ஆக்கம் தருவது; ஆயின், அழகியின் இடையோ இடைக்கொடி - சுருங்கிய கொடி என மெலிந்துள்ளது. உடலின் நடுப்பகுதியில் இடை அமைந் துள்ளது. இதுவும் நடுவுநிலையே; எனினும் சான்றோரின் நடுவு நிலைக்கு மாறுபட்டு மெலிந்துள்ளது. இது ஓர் அரிய கற்பனையாகும்.

### பாடல்

வையக முயிர்த்தோன் மதிபுனைந் தியற்றலிற்
கைபுனைந் தியற்றுங் கதிர்மணித் திண்டேர்
கடாதுருக் கொண்டோடுந் தடாதபே·ரல்குற்
கீழ்மே லாகக் கிளர்ந்தெழி னத்தகு
வாழையொடு பொரூஉம் வார்ந்தசெறி குறங்கின்
வேற்றொரு தாமரை மேவந்து தொழில்செய
வீற்றிருந் தருளும் விரைமல ரேய்க்கு
மலத்தக மலர்ந்த நலத்தகு சீரடி (75 - 82)

### தெளிவுரை

உலகங்களைப் படைத்த நான்முகன் அறிவினால் படைத்து இயற்றுவதனால், யவனர்கள் கையால் படைத்து இயற்றிய ஒளியுடைய அழகிய வலிமையான தேரினுக்கு ஒப்பாகாமல், இயற்கை வடிவுடன் ஆடவர் நெஞ்சங்களில் தடுக்கப்பெறாமல் ஓடும் பெரிய அல்குலினையும், கீழ்ப்பகுதி வாழையின் அரைப்பகுதிக்கு மேல், உள்ளதாக வளர்ந்து எழுந்தால், அத்தகைய வாழைக்கு ஒப்பாகும் தொடை

யினையும், வேறு ஒரு தாமரை விரும்பி வந்து பணி செய்ய அரசாக வீற்றிருந்து அருள் செய்யும் மணமுள்ள தாமரையை ஒக்கும் செம்பஞ்சு ஊட்டிய மலர்ந்த அழகமைந்த சீரான கால்களையும்,

***விளக்கம்***

வையகம் உயிர்த்தோன் - உலகங்களைப் படைத்த நான்முகன்

மதிபுனைந்து - அறிவால் அழகுடன் இயற்றி

கடாது - ஒப்பாகாது, இணையாகாது

உருக்கொண்டு - வடிவம் கொண்டு

தடாத - தடுக்காத

பொரூஉம் - ஒப்பாகும்

குறங்கு - தொடை

மேவந்து - விரும்பி வந்து

விரைமலர் - மணமுள்ள மலர்

***பாடல்***

மயிலியன் மருளு மியன்மட மாதரைச்
சீலம் விழைவே செயல்குறி யிவற்றான்
நால்வகைப் பேதமு மாலறத் தெரிந்து
மருந்துமந் திரத்துந் திருந்துவிழை வேற்றித்
தேயம் பயிற்சி சேட்டை யியல்பே
யின்பத் துறையே யிருவகைத் தொழிலே
யிங்கித வகையே யிவைநனி நாடி

யிருவகைப் பொழுதொடு மேற்ப மருவிய
மூன்று காலமு மூன்று வேகமு
மொப்பக் கலவி யுளுற்றுபே ரின்ப
அவாவுளம் பொதிந்துகொண் டழற்றுவெம்
படர் நோய்
தவாது பிறை போலத் தணிவின்றி வளர
வுவாமதி போல வுருவே தபவும்
கடவுட் பொங்கரும் தடமருப் பாவும்
சிந்தா மணியு நந்தா நிதிகளும்
கலன்முத லான வளம்பல கொழிப்ப
பல்வகைக் கணமும் பணிந்தெழுந் தேத்த
தெவ்வுத் தானவ ரவ்வித் தேங்க

(83 - 100)

## தெளிவுரை

மயிலின் சாயலும் அஞ்சும் இயல்பையுடைய மென்மையான மகளிரை, அவர்களுடைய ஒழுக்கமும் விருப்பமும், செயலும் குறியும் ஆகிய இவற்றால், நான்கு வகை வேற்றுமைகளையும் குற்றம் இன்றித் தெரிந்து, மருந்து, மந்திரம் ஆகியவற்றால் திருந்துவதற்குரிய விருப்பத்தை அதிகரித்து, நாடு, பயிற்சி, செய்கை, இயற்கை, இன்பத் திற்குரிய பகுதிகள், இருவகையான தொழில்கள், இன்ப வகைகள் ஆகிய இவற்றை மிகுதியாக ஆராய்ந்து, பெரும் பொழுது, சிறுபொழுது ஆகியவற்றுடன் ஏற்றவாறு பொருந் திய மூன்று காலங்களும், மூன்று வேகங்களும், பொருந்துமாறு புணர்ச்சி புரியும் பேரின்பத்திற்குரிய ஆசைப்படும் மனத்தை

மறைத்துக் கொண்டு சுட்டுப் பெரிதாகப் படருகின்ற காமநோய், இடைவிடாமல், பிறை நிலாபோல், குறைதல் இல்லாமல் வளர்வதனால், நிறைநிலா உருவம் மெலியவும், தெய்வத் தன்மையுடைய மரங்களும், பெரிய கொம்புகள் கொண்ட காமதேனுவும் சிந்தாமணியும், அழியாத செல்வங் களும் அணிகலன்கள் முதலான பலவளங்களைக் கொடுத்துச் செழுமையாக்கவும், பலவகையான தேவகணங்களும் (கூட் டங்களும்) வணங்கி எழுந்து போற்றவும், பகைமை கொண்ட அசுரர்கள் பொறாமையடைந்து ஏங்கவும்,

***விளக்கம்***

'மயில் இயல்' என்னும் தொடருள் 'இயலும்' என்பது 'இயல்' என விகாரத்தால் தொக்கது என்பர். மருளுதல் மயிலின் இயல்பாகும்; எனவே, ''மயில் இயல் மருளும் இயல்மட மாதரை'' என்னும் தொடருக்கு, 'மயிலின் இயல்பைப்போல் மருளும் தன்மையுடைய மென்மையான மாதர்களை' என்று பொருள் கொள்ளுதல் நலமாகும்.

சீலம் - ஒழுக்கம், பண்பு.

***நான்கு வகைப் பேதங்கள்:*** வாலை, தருணை, பிரவுடை, விருத்தை ஆகியன. இவை மகளிரின் பருவங்கள்.

தேயம் - நாடு

***பயிற்சி:*** வாதம், பித்தம், சிலேட்டுமம் என்பவற்றுள் இன்னது கொண்டுள்ளார் என மகளிரின் உண்மையையறிவது.

மாதர்க்குரிய பருவ காலங்களில் உள்ளத்தின் வேட்கை யைப் பகுத்துணர்தல் 'சேட்டை நாடல்' ஆகும்.

மாதர் சாதியும் ஆடவர் சாதியுமாகிய மரபுக்குட்பட்ட அவரவர் குறிகளின் பரிமாணங்கள் இன்னின்ன என்று அறிதல் 'இயற்கை நாடல்' ஆகும்.

புல்லுதல், சுவைத்தல் முதலிய புணர்நிலை வகை களை அறிதல் 'இன்பத்துறை நாடல்' எனப்படும்.

புணர்ச்சியின்போது புடைத்தல், வழிபடல் என்னும் இரண்டனையும் அறிதல் 'இருவகைத் தொழில் நாடல்' ஆகும்.

கிராமியம் பௌத்திகம் முதலிய செயல்களாகிய புணர்ச்சி வகைகளை அறிவது 'இங்கித வகை நாடல்' எனப்படும்.

'இருவகைப் பொழுது' - பெரும்பொழுது, சிறு பொழுது ஆகியன.

வேகம் - விரைவு, சமம், தூக்கு என்பன

தவாது - வழுவாது

கணம் - கூட்டம்

தெவ்வுத்தானவர் - தேவர்களிடத்துப் பகைமை யுடைய அசுரர்கள்

அவ்வித்து - பொறாமை கொண்டு

## பாடல்

விரிகதிர் பிழம்பு மரிமான் றவிசிற்
களிகூர் நெஞ்சாற் காவல் வைகு
மொளிகூர் மகவா னுறுபத மாதி
யெளிதினுய்த் தளிக்குந் தெளிவினை போலாது
பார்முதிர் புணரிப் பாயற் கடவுள்
வார்மதுப் பொகுட்டு மரைமலர்ப் புத்தேள்
என்றிவர் தமக்கு மெய்தற் கரிய
சரியை கிரியை யோகத் தவநிலைப்
பெயர்பொச் சாப்பப் பிறக்கணித் துகவு
மூன நாட்க முயற்றிய திருவருள்
ஞானநாடக நவிலிய மாறலு
மானா மலப்பகை நோனாது கழலத்
தானா னந்தத் தனியுயிர் மடங்கக்
கட்காண் குருமுதற் கடவு ளாகி *(101 - 114)*

## தெளிவுரை

விரிந்த ஒளிக்கதிரைப் பரப்பும் அரியணையில் மகிழ்ச்சி மிகுந்த உள்ளத்துடன் அரசு புரியும் புகழ்மிக்க இந்திர பதவி முதலியவற்றை எளிதில் கிடைக்கச் செய்யும் தெளிந்த நல்ல ஊழ்வினை போல் இல்லாமல், உலகில் பழமையான பாற்கடலினிடத்து ஆதிசேடனாகிய பாம்பணையின்மேல் துயிலும் திருமாலும் நீண்ட தேன் பொருந்திய தாமரை மலரில் தங்கும் நான்முகனும் ஆகிய இவர்களாலும் அடைவதற்கு அரிய, சரியை, கிரியை யோகம் என்னும் யோகமாகிய தவநிலைக்குரிய பெயர்களை மறக்கும் நிலையில் புறக்கணித் தலாலும், ஈனமான நாடகம் நடத்திய இறைவன் இனி ஞான

நாடகம் நடத்தும் பொருட்டு மனம் மாறியதும், நீங்காத ஆணவம், கன்மம், மாயையாகிய மலப்பகைகள் தவஞ் செய்யாது நீங்கவும் தானாகத் தனி உயிர் கிழ்ப்படியுமாறு கண்களால் காணக்கூடிய குரு, முதற் கடவுளாகி,

## விளக்கம்

'காவல்வைகும் ஒளிகூர் மகவான்' என்னும் தொடர் வானுலகை ஆளும் புகழ் மிக்க இந்திரனைக் குறிக்கிறது.

'மகவன்' என்றும் இந்திரனைச் சுட்டுவர்.

'தெளிவினை' என்பது, தெளிவான ஆக்கந்தரும் ஆகலூழ் என்னும் நல்வினையைக் குறிக்கும். நல்லது செய்தால் என்றும் நல்லதே நடக்கும் என்பது தெளிவாக யாவரும் அறிந்த ஒன்று. 'தெளிவு' என்பது அறிவையும் குறிப்பதால், 'அறிவுக்குரிய செயல்' என்னும் பொருளிலும் 'தெளிவினை' என்னும் தொடர் அமைந்துள்ளது சிந்தித் தற்குரியது.

பிழம்பும்' என்பது பண்படியாக அமைந்த சொல். 'ஆதிய' என்னும் சொல் 'ஆதி' எனக் குறைந்து நின்றது.

''பார் முதிர் புணரி'' என்னும் தொடர், உலகில் பழமையான கடலாகிய பாற்கடலைக் குறிக்கிறது. புணரி கடல்.

''வார்மதுப் பொகுட்டுமரைமலர்ப் புத்தேள்'' என்பது நீண்ட தேன் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகக் கடவுளைக் குறிக்கிறது.

பொச்சாப்ப - மறக்கவும்
பிறக்கணித்து - கைவிட்டு

***சரியை:*** திருக்கோயிலில் திருவலகிடல், மெழுகுதல், மலர் கொய்தல், மாலை தொடுத்தல், விளக்கேற்றுதல், இறைவனடி யார்கள் ஏவிய பணிகளைச் செய்தல் முதலிய செயல்கள். திருநாவுக்கரசர் 'சரியை' என்னும் நெறியை மேற்கொண்டு தொண்டாற்றிய பெருமைக்குரியவர்.

***கிரியை:*** ஈசனை ஒருமைப்பட்ட மனத்துடன் துதித்துப் பூசை செய்து, அழல் ஓம்புதல்.

***யோகம்:*** யோக உறுப்புக்களான எட்டுவகை இயல்பு களும் வாய்க்கப்பெற்று, பிங்கலையையும் இடகலையையும் அடக்கி உயிர்க்காற்றை நடுநாடியில் நிறுத்தி ஆறு ஆதாரங் களையும் அவற்றின் பொருள்களையும் அறிந்து, தியானம் செய்து, மூலாதாரத்தில் அனலை எழுப்பி உந்தியில், குண்டலிசத்தி வடிவமாக இருக்கும் அமிர்தை உருகச் செய்து, பிற ஆதாரங்களின் கீழ்முகமாக உள்ள பதுமங்களை வேறு படுத்தி மேல் சென்று சோம வட்டத்தில் பெருகியுள்ள அமிர்தம் உண்டு பேரொளியாகிய இறைவனைத் தியானம் செய்து, அவ்வொளியில் கூடியிருத்தல்.

***ஊன நாடகம்:*** உயிர் (ஆன்மா) தன்னை இத் தன்மையன் என்பதனை உணர மறந்து, தன்னிலிருந்து வேறுபட்ட உடம்பைத் தான் என்று எண்ணிப் பொருள் சார்புகளையும் உயிர்ச் சார்புகளையும் நிலையானவை என்று எண்ணித் துன்புற்று நடப்பதை ஊனநாடகம்' என்று கச்சி யப்பர் குறிப்பிடுகிறார்.

உயிர் உடலுடன் பொருந்தினாலும் உடலுடன் கலப்பற்ற தன்மையுடையது. அவ்வாறு துன்புற்ற உயிராகிய ஆன்மா இறைவனை அறியாது வருந்துகிறது. அவ்வுயிரைச் சத்திநிபாதாநு குணமாகத் தீக்கை செய்து அருளால் அநுக்கிரகிக்கும் முறையினை 'ஞான நாடகம்' என்றார் ஆசிரியர்.

இறைவன் குருவாக வந்து அவத்தைகளிலிருந்து உயிரை விடுவிக்கிறார். அறியாமையை நீக்கி, அவா, அறிவு, செயல்களை இடையீடு இல்லாமல் விளங்கச் செய்கிறார். அதனால், 'நவிலிய மாறலும்' எனக் குறிப்பிடுகிறார் ஆசிரியர்.

'குருமுதற்கடவுள்' என்னும் தொடரினை 'முதற் கடவுள் குரு' என மாற்றியமைத்துக் கொண்டு பொருள் காணவேண்டும்.

அறியாமை, செருக்கு (அகங்காரம்), ஆசை, விருப்பு, வெறுப்பு முதலியவற்றைக் கைவிட்டுத் தான் தனித்து இறைவனிடம் நிற்றலை, 'தானாநந்தலும் மடங்கலும்' என்றார் கச்சியப்பர்.

### பாடல்

உயிரே யவத்தை யுணர்த்துந் தன்மை
யருளி னியல்பே யாங்கதன் பயனே
பெரும்பெயர்த் திறமே பெற்றவர் முறையென்
றனைவகை யேழு மரிறபத் தெரிப்பத்
தாழாது கேட்டு வீழாது சிந்தித்
தங்கைக் கொண்ட வமிழ்தெனத் தெளிந்து

பொங்குபே ரின்பம் புணராது புணரு
நிட்டை கூட நிலையது நீங்கவும்
பஃறிறப் பகைஞர் படையொடு நேர்ந்தென
வெஃறிறங் காட்டாது வீற்றுவீற் றுடற்றும்
பிணிக்கோட் பட்டுப் பேதுறு மனத்தான்
முந்தையோ ரீட்டு முழுநிதிச் செல்வமும்
பொய்ம்மை யாளர் புகழெனத் தேய
நோய்ப்பகை யாளர்க்கு நொடிந்தென் சிதரிற்
பல்வகை மருந்துக்குப் பகர்விலை தொலைச்சி
யதுவென வெறுவிய தன்றுமற் றிதுவென
முன்னைநாண் மருந்தைப் பெட்டுவாய் மடுத்துப்
பண்டைநோய் மேலும் பருகுபன் மருந்தான்
மண்டுநோய் வேறு மரீஇக் கிளர்ந் துருப்ப
யுரைத்தவென் மொழிவழி யொழுகினை யல்லைகொல்
பெருத்துநோய் தெறுமென மருத்துவ னொழியத்

*(115 - 136)*

## தெளிவுரை

உயிர், அவத்தை, உணரச் செய்யும் தன்மை, அருளின் இயல்பு, அவ்வருளின் பயன், இறைவனது ஆற்றல், இறைவனது அருளைப் பெற்றவர் முறை ஆகிய அவற்றின் ஏழுவகைகளையும் ஐயம் இல்லாமல் தெரிவிப்பதனால், குறைவில்லாமல் கேட்டு, அறியாமையில் விழாமல் கேட்டு, எண்ணிப் பார்த்து, உள்ளங்கையில் கொண்ட அமிழ்தம் எனத் தெளிவடைந்து மிக்க பேரின்பத்தைக் கூடாமல் கூடும் சமாதி நிலையும் நீங்கவும், பலவகைப்பட்ட பகைவர்கள் படையுடன் எதிர்த்துத் தாக்கியது போலத் தம்மை வெல்லுகின்ற

தன்மையைக் காட்டாமல், வெவ்வேறாகப் போரிடும் நோயி னால் பீடிக்கப்பட்டு மதிமயங்கும் மனத்தால் முன்னோர் சேர்த்த முழுமையான செல்வம் அனைத்தும் பொய்மை யானவர்களின் புகழைப்போல் தேய, நோய்ப்பகை உள்ளவர் களுக்கு வருந்தி என்னபயன்? மழைத்துளியைப் போல், பலவகைப்பட்ட மருந்துகளுக்குச் சொன்ன விலையைக் கொடுத்து, முன் உண்ட மருந்தைப் போல் பயனற்றது அன்று இது என்று முன்னாள் உண்ட மருந்தை ஒவ்வொன்றாக இகழ்ந்து, பின்நாளில் அளித்த மருந்தை ஆர்வமுடன் உண்ண லும், அவ்வாறு பருகிய பலவகைப்பட்ட மருந்துகளால் பழைய நோய்கள் மிகுந்து வேறுநோய்களும் சேர்ந்து தோன்றித் துன்புறுத்தவும், ''சொன்ன என்னுடைய சொல்லின்படி நடக்கவில்லை. எனவே, நோய் மிகப் பெருகி அழிக்கும்'' என்று சொல்லி மருத்துவன் நீங்கியதால்,

## உயிரை அறிவுறுத்தல் அல்லது தெரிவித்தல்

உயிர் அளவற்றது; விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் என மூன்று வகைப்பட்டது; என்றும் நிலைத்திருப்பது; சத்த சத்துக்களைப் பகுத்தறியும் தன்மையது; சிற்றறிவினது.

## அவத்தைகளைத் தெரிவித்தல்

இது, நனவு, கனவு, உறக்கம், பேர் உறக்கம், உயிர்ப் படக்கம் என ஐந்து வகைப்படும். இவற்றின் இடங்கள், புருவநடு, அது தொடுத்துக் கண்ட முடிவு, அது தொடுத்து இதயமளவு, அது தொடுத்து நாபிசுறு, அது தொடுத்து மூலா தாரவரை என அமையும். இவற்றின் கருவிக் கொத்துக்கள்

ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்பன. காரணா வத்தை கேவலம், சகலம், சுத்தம் என மூன்று வகைப்படும்.

### அருளின் இயல்பு தெரிவித்தல்

உயிர்களுக்கு மெய் உணர்வை ஊட்டுவது, ஆன்ம ஞானம் உருவாக்கி வடிவமில்லாத இறைவன் வெளிப்பட குரு வடிவமாக வருவது அருள் சத்தியாகும்.

### அதன் பயன் தெரிவித்தல்

பூதம் முதற் கொண்டு நாதம் முடிவாக உள்ள பிரபஞ்சங்கள் எல்லாம் தன் உள்ளே விளங்குதல்; இறைவன் சிறுமைக்குச் சிறுமையாகவும் பெருமைக்குப் பெருமை யாகவும், உயிர்களுக்கு உயிராகவும் அமைந்துள்ள தன்மைகள் விளங்குதல்.

### பெரும் பெயர்த் திறம் தெரிவித்தல்

இறைவன் வடிவம் அற்றவன்; குறிகுணங்கள், தோற்றக்கேடுகள், பந்தவீடுகள் இல்லாதவன்; நிலைத்துத்தான் அனைத்திலும் கலந்து, தன்னை ஒன்றும் கலத்தல் இல்லாமல், நிருவிகாரியாக எப்போதும் ஒரு தன்மையுடையவன்.

### பெற்றவர் முறை தெரிவித்தல்

மெய்ப்பொருளுடன் ஒற்றுமையடைய் இடை விடாது பாவனை செய்தல்; விருப்பு, வெகுளிகள், கரண வாதனை, முக்குணச் செயல்கள், அடையாளமும் நியமங்

களும் வறுமை வாழ்வும் இல்லாமல் இறைவன் திருவடிகளை இடைவிடாமல் நினைத்தல்.

'பொங்குபேரின்பம்' என்பது, நிர் அதிசய இன்பம்.

'புணராது புணர்தல்' என்பது, ஒருசமயம் நீங்கிப் பின்னர் கூடாமல் இடையறக் கூடல். இவ்வாறு கூடுவதற்குக் கருவியாக அமைவது நிட்டையாகும்.

'பலதிறம்' என்பன துணை, சுற்றம், பொருள் முதலியன.

சிதர் - மழைத்துளி

*பாடல்*

தெய்வத் திறத்தாற் றீர்வுகாண் பாமென
வுள்ளூர் வயின்வயின் றெள்ளிதி னோங்கும்
புரிமுறுக் கவிழ்க்கும் பூம்புனற் றீர்த்தமும்
பல்வகைத் தெய்வப் பசும்பொற் கோட்டமும்
படிந்தும் பணிந்தும் பயன்கா ணாமை
யணியயற் புறநகர் மணிகெழு கோட்டமும்
விரத நியதிப் பரவு கடனாதிப்
பல்வேறு தொழிலொடு படர்ந்துபணிந் தேத்தியுங்
கவலை நெஞ்சங் கையறு பினையச்
சேட்சென் றொராஅல் செய்தென வலித்து
மிக்கநோய்க் கிரங்கு மொக்கல்புறந் தழுவ
வறுமைக் கவற்சியு மிறுகுறப் பிணிப்ப

வில்லுந் தமரு மிசைபயி னாடு
மென்மெலக் கழீஇ விரிகதிர்ப் படையா
லிருள் கால்சீக்கு மெழுபரித் தேரோன்
கடுஞ்சினந் திருகிய கொடுமைகூ ரமயத்து
முளிமுதன் முருக்கிய முழங்கழல் போழ்ந்து
வளியுலாய்ப் புறத்தும் வழங்குநர்த் தெறூஉம்
பைதரு கானத்துப் படர்நெறி யொதுங்கலின்
முந்துப லுழந்த வெந்துயர்க் கொப்புள்
பிந்துபர லுழத் தொறூஉம் பிளந்துநீ ருகுப்ப
வியங்காச் செல்ல லிணையடி தாங்க
வெயிற்பகை யுழந்த வேர்ப்புற நனைப்ப *(137 - 159)*

## தெளிவுரை

தெய்வங்களின் ஆற்றலால் நோய்களுக்குத் தீர்வு காண்போம் என்று உள்ளூரில் உள்ள இடங்கள்தோறும் தெளிவாக ஓங்கிய மலர் இதழ்களின் முறுக்குகளை வண்டுகள் அவிழ்க்கும் அழகிய நீர்நிலையில் உள்ள புனித நீரில் நீராடி யும் பசும்பொன்னால் அமைந்த கோயில்களில் வணங்கியும் பயன் கிடைக்கப் பெறாமையாலும், அருகில் அயல் நகர்ப் புறத்தில் உள்ள அழகு பொருந்திய கோயில்களையும் விரதம் இருத்தல், சடங்குகள் ஆற்றுதல், வழிபாடு செய்தல் முதலிய கடன்களைப் பலவகைத் தொழில்களுடன் பரவிப் பணிந்து போற்றியும் கவலைக் கொண்ட உள்ளம் செயலற்று வருந் தவும், தொலைவில் உள்ள பல நாடுகளுக்குச் சென்று இந்நோயினைப் போக்கிக் கொள்ளச் செய்வேன் என்று முடிவு கட்டி, மிகுந்த நோய்க்கு இரக்கம் கொள்ளும் சுற்றத்தார் தன்பக்கம் சூழ்ந்துவர, வறுமைக் கவலையும் இறுகப் பற்றிக் கொள்ளத் தன் மனைவியையும் தம்மைச் சார்ந்த பெற்றோர்

முதலிய உறவினர்களையும் பெருமையுடன் பயின்றுள்ள நாட்டினரையும் மெள்ள மெள்ள விட்டு நீங்கி, விரிந்த கதிராகிய படையால் இருட்டாகிய பகையை நீக்கும் ஏழு குதிரைகள் பூட்டிய தேரையுடைய சூரியன் கொடிய வெப்பமாகிய வெம்மை பெருகிய கொடுமைமிக்க நேரத்தில், மரத்தின் அடிவேர்களையும் வெம்மையால் முருக்கிய குமுறுகின்ற நெருப்பைப் பிளந்து, காற்று உலாவி அப்பக்கங்களில் உள்ளவர்களைத் துன்பம் அடையச் செய்கின்ற கொடிய பாலை நிலத்தில் கற்களுள்ள வழியில் செல்லுதலால், முந்தைய பரல்கற்கள் உறுத்தியதனால் கொடிய துன்பத்திற்குரிய கொப்புள்கள் பிறப்பட்ட பரல்கற்கள் உறுத்தும் போதெல்லாம் பிளவுண்டு நீரைச் சொரிதலால், செல்ல முடியாத துன்பத்தை இரு பாதங்களும் தாங்க, வெயில்பகைத் துன்பத்தால் வேர்வையால் உடம்பு முழுவதும் நனையவும்,

***விளக்கம்***

'விரதம்' என்பது ஒரு பொழுது மட்டும் உணவு உண்டல் முதலியன. 'ஆதி' என்பது உண்ணாவிரதம் முதலிய செயல்களைக் குறிக்கிறது.

'ஒருவல்' என்பது 'ஒரால்' என வந்துள்ளது. தவிர்தல், நீங்கல் என்னும் பொருள்களைக் கொண்டது.

தமர் - தாய் தந்தையர் முதலிய நெருங்கிய சுற்றத்தினர்.

கழீஇ - நீங்கி

கால்சீக்கும் - இருளை அகற்றும், வேரோடு நீக்கும்.

எழுபரித்தேரோன் - ஏழு குதிரைகள் பூட்டிய தேரைக் கொண்ட கதிரவன்.

கடுஞ்சினம் திருகிய - வெப்பத்தின் முதிர்ச்சியைத் தெரிவிக்கும் தொடர்

படர் - கல்மேடு

இயங்காச் செல்லல் - இயங்க இயலாத துன்பம்

முந்துபரல் - பரற்கற்களின் முற்பட்ட கூறு.

பிந்துபரல் - பிற்பட்ட பரற்கற்களின் கூறு.

*பாடல்*

சூறை மாருதந துறைத்துறை யெடுத்த
பூழி போர்த்த பொற்பறு மாசு
கலுழ்நீ ரல்லது கயந்தலை யின்மையிற்
கழுவுதல் புரியா முடைபயில் காயமோ
டிலையின் மராத்த நிலையின் மென்னிழற்
சேய்வரல் வருத்தஞ்சிதைபாக் கசைந்து
நெட்டுயிர்ப் பெறிந்து நினைதரு மிரவல
வாற்றா நின்னுளத் தவலமினி யொழிக
புளிஞரு மருளும் போக்கருஞ் சுரத்து
வீற்றுவீற் றொழுகு மாற்றினிற் றிரியா
தொருநெறி யெதிர்ப்பா டுற்றது முன்னைப்
பழுதறு பெருந்தவப் பயனது போலும்
விழும வெந்துயர் முழுதொரால் வேண்டிற்
பாணியா தின்னே காணிய வெழுமதி
தோறேர்க் கோடுந் திருகுகோட் டிரலையபி

னோய்ப்பகை யென்ன வாய்ப்பிலா தமையு
மடுத்தடுத் தியானு மலமரு காலை

*(160 - 176)*

## தெளிவுரை

சூறைக்காற்று துறைதோறும் எடுத்துப் புழுதி போர்த்திய அழகற்ற அழுக்குடன் கலங்கிய நீர் அல்லாமல் அங்குக் கயநீர் இல்லாததனால் கழுவாத முடைநாற்றம் பொருந்திய உடம்போடு, இலைகள் இல்லாத அடிமரத்தின் மெல்லிய நிழலில், தொலைவிலிருந்து வரும் வருத்தம் அழிப்பதற்கு, உடல் அசைந்து பெருமூச்சு எறிந்து நினைக் கின்ற இரவலனே!

உன் உள்ளத்தில் தாங்க முடியாத துன்பத்தை இனி நீக்குவாயாக! வீரர்களும் மயக்கமடைகின்ற செல்லுதற்கு அரிய பாலை நிலத்தில், வேறு வேறு பகுதிகளாகச் செல்லும் நெறிகளில் (பாதைகளில்) தவறான நெறியில் திரிந்து செல்லாமல், யானும் நீயும் ஒரு நெறியில் எதிர்ப்பட்டோம். அது முந்தைய குற்றமற்ற பெரிய தவப்பயன் போலும்! இடுக்கண்ணாகிய கொடிய துன்பம் முழுதும் நீங்குதல் வேண்டின் காலத்தை வீணாக்காமல் இப்போதே இறை வனைக் காண்பதற்கு எழுவாயாக!

கானல் நீருக்காக ஓடுகின்ற திரிந்த கொம்புகளை யுடைய மானைப் போன்று, நோய்களைத் தீர்ப்பதற்குப் பகையென்றவாறு, வாய்ப்பில்லாமல் அமையாம், அடுத்தடுத்து யானும் துன்பப்படுகின்றபோது,

### *விளக்கம்*

'நினைதரும் இரவல' என்னும் தொடர், நோய் நீங்குதல் பற்றியும், பாலை வழியைக் கடத்தல் பற்றியும், தன் ஊர் அடைதல் பற்றியும், இறைவனைப் பற்றியும் பலவாறு நினைக்கும் இரவலன் என்னும் பொருளில் அமைந்துள்ளது.

'ஆற்றா' என்பது பொறுத்துக் கொள்ள முடியாத அல்லது தாங்க முடியாத என்னும் பொருள் தரும்.

'புளிஞர்' - வீரர்கள், மறவர்கள்.

சுரம் - பாலைவழி

இன்னே - இப்போதே

மதி - முன்னிலை அசை

தோல்தேர்க்கு - கானல் நீருக்கு

திருகுகோட்டுஇரலை - திருகிய கொம்புகளை யுடைய மான்.

அலமருகாலை - வருந்துகின்றபோது

### *பாடல்*

யூரூர் வைகிய சீர்கெழு மாந்தரு
ளுண்டி கலவி யுறுதொழின் முதலா
மண்டிய பகுப்பின் வரையறைப் படாது
வேறுவே றுயிர்க்கும் வெம்பிணி யாளருங்
கருவி போழ்ந்த பெரும்புண் ணுறுநருங்
குட்டம் பெருநோய் முட்டிய வாத
முயலக னாதி மொய்ப்பிணி யுழவரும்

பாப்புக் கோளாதிப் பலவகைக் கடிஞரும்
பேய்கோட் பாடுநரும் பித்துமீக் கூர்நரு
முறுப்புக் குறைநரு மொண்குண மிழநரு
மின்ன பஃறிறத் தெனைவரு மன்றிக்
கல்விவேட் டவருங் கான்முளை வீழ்நருஞ்
செல்வம் வீழ்நருந் தேயநா டுநரு
மலர்முலை மடவார் கலவிகா முறுநரு
மிரண்டறு கலப்பி னின்பநச் சுநரு
மினையபல் வேறு நினைவின ரெவரும்
வாட்டுவ தணப்பவும் வேட்டன மணப்பவு
மேற்கொண் டெழுந்து மேனா ணேர்ந்த
பொற்கிழித் திரளும் பூந்துகின் மூடையும்
மணிப்பூட் பேழையும் வார்தரு கவரியும்
பைம்பொற் கவிகையுஞ் செம்பொற் சிவிகையு
மூர்தியுங் கொடியும் வார்விசி முரசுஞ்
சூட்டுவா ரணமுந் தோகைய மயிலுந்
தத்தமக் கியன்ற தழீஇயினர் போது
மோசைதிக் கதிர்க்கு மாசனப் பெருக்கங்
காண்டொறுங் காண்டொறு மீண்டிய களியே
னுடங்குசென் றிருப்பா னொருப்பட் டெழலுந்
துன்னிய விழுமநோய் தன்ன நீங்க

*(177 - 204)*

## தெளிவுரை

**ஊர் ஊராகச் சென்று வசிக்கின்ற சிறப்புமிக்க மனிதர்களுள், உணவு, புணர்தல், மேற்கொண்ட தொழில் முதலாகிய நிறைந்த பகுதிகளில் எல்லைக்கு உட்படாது**

வெவ்வேறாகப் பெற்றெடுத்த கொடிய நோயுடையோரும், வெட்டுங் கருவிகள் பிளந்த பெரிய புண்களை அடைந்தவர்களும், தொழுநோய், பெரியநோய், முயலகன் என்னும் நோய் முதலிய நோய்கள் பிணித்து வருந்துகின்றவர்களும், பாம்பு முதலியவற்றால் கடியுண்ட பலரும், பேய் கொண்டவர்களும், பித்து மிகுந்தவர்களும், உடலுறுப்புக் குறைந்த ஊனமுற்றவர்களும், நல்ல பண்புகள் இழந்தவர்களும் என இத்தகைய பலதிறப்பட்ட எத்தகையவரும், கல்வியை விரும்பியவர்களும், குழந்தைப் பேற்றை விரும்பியவர்களும், செல்வம் விரும்பியவர்களும், நாடாள விரும்பியவர்களும், பரவிய மலர் போன்ற முடை கொண்ட பெண்டிரின் புணர்ச்சியைக் காமுற்றவர்களும், இரண்டற்ற இறைவனோடு ஒன்றும் பேரின்பத்தை விரும்பியவர்களும், இத்தகைய பல வேறுபட்ட எண்ணமுடையவர்கள் எத்தகையவரும், வாட்டும் துன்பங்களை நீக்கிக் கொள்ளுதற்கும், விரும்பியவற்றை அடையவும், விரதம் மேற்கொண்டு எழுந்து, முன் நாள் வேண்டிக்கொண்ட பொற்கிழித் தொகுதியும், பூவேலைப்பாடு அமைந்த துகில் மூடையும், மணிகளும் அணிகலன்களும் உள்ள பேழையும், நீண்ட கவரியும், பசும்பொன் குடையும், செம்பொன் பல்லக்கும், ஊர்திகளும், கொடியும், வாரினால் கட்டப்பட்ட முரசமும், செஞ்சூட்டுக் கோழியும், தோகையுடைய மயிலும் ஆகிய இவை அனைத்தையும், தங்களுக்கு முடிந்தவாறு தழுவிச் செல்லும்போது செல்லும் ஒலி திசைகளை அதிரச் செய்கின்ற மாபெரும் மக்கள் கூட்டம் காணுந்தோறும் காணுந்தோறும் கூடிச் சென்ற களிப்புடையேனாகிய யான், விரும்பி எழுந்தபோது, நெருங்கிய துன்பநோய் சிறிதளவு நீங்குதலால்,

**விளக்கம்**

வைகிய - தங்கிய, வசித்த, உறைந்த
கலவி - புணர்ச்சி, போகம் துய்த்தல்
உறுதொழில் - உற்ற தொழில், அடைந்த தொழில்
மண்டிய - பெருகிய, மிகுந்த
பாப்புக்கோள் ஆதி - பாம்புக்கடி முதலியன
பேய்கோட்படுநர் - பேயால் பிடிக்கப் பெற்றவர்கள்.
'பித்து மீக்கூர்நர்' - பித்து மிகுதியடைந்தவர்கள்
ஒண்குணம் - நல்ல பண்பு
வேட்டவர் - விரும்பியவர்
தேயநாடுநர் - நாட்டைப் பிடித்து மன்னராகி நாட்டை ஆட்சி செய்யத் திட்டமிடுவோர். இது பதவி ஆசையைக் குறிக்கிறது.
கான்முளைவீழ்நர் - குழந்தைப் பேற்றுக்கு ஆசைப் படுபவர்கள்.

'வீழ்நர்' என்பது 'விரும்புபவர்' என்னும் பொருள் பெறும்.

''இரண்டறு கலப்பின் இன்பநச்சுநர்'' என்னும் தொடர், தான்வேறு இறைவன் வேறு என்னும் வேறுபாடு நீங்கி, இறைவனுடன் ஒன்றுகின்ற பேரின்ப நிலையை உணர்த்துகிறது. இந்த நிலை ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் கைவிட்ட பிறகே வந்தடையும்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்'' (குறள். 50)

என்னும் குறள் இரண்டற இறைவனுடன் கலக்கும் பேரின்ப உயர்வைக் குறிப்பதும் இங்கு ஆயத்தக்கதாகும்.

தணப்பவும் - நீங்கவும்
மணப்பவும் - கூடவும்
மேல்நாள் - முன்நாள்
வார்த்தருகவரி - நீண்ட சாமரை
சூட்டுவாரணம் - செஞ்சூட்டுக்கோழி
தழீஇனர் - கலந்தவர்கள், சேர்ந்தவர்கள்.
மாசனப் பெருக்கம் - பெரிய மக்கள் பெருக்கம்
உடங்குசென்று - கூடிச் சென்று
இறுப்பான் - சேர்வதற்கு
துன்னிய - நெருங்கிய
விழுமநோய் - துன்ப நோய்
தன்னம் - சிறிது

*பாடல்*

வுறுதுயர் யாக்கை சிறிதுவலி யெய்த
வொய்யெனக் கிளர்ந்த வுவகைநெஞ் சத்துப்
படர்பே ரூக்கம் பிடர்பிடித் துந்த
வெழுந்தன னிம்மென வேகுத றொடங்கி
யடிபெயர்த் தோறு மஞர்ப்பிணி நழுவ
வுவரி நீரிற் றவவெழு மகிழ்வா
லவன் மிசை பாடாஅ வனைத்து நெறியாகச்
சென்றன னடுத்து மன்றனகர் நுழைதலும்
வெருவுநோ யிருகூற் றொருகூறு விலங்கக்
காட்சி யார்வங் கையிகந் தீர்த்தலின்

நறுமணங் கமழு நந்திநதி குடையா
தெழுமுனி வரர்த மெழுசுனை யாடா
தலைமலைப் பகைஞ ருட்கயம் படியாது
நாக வண்சுனை நன்புன றோயாது
விண்டு தீர்த்த மேவரக் குளியா
தலரவ னிருஞ்சுனை யழிபுனன் முழுகா
தெத்துயர்த் திரளு மத்தினத் தகற்றுஞ்
சரவணப் பொய்கைத் தடம்புனற் றுளைந்து
மென்மெலக் குன்ற மீமிசை யிவர்ந்து
காலை நண்பகன் மாலைமுப் போதும்
வைகல் வைகன் மலர்மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது

*(205 - 226)*

## தெளிவுரை

மிக்க துன்பம் அடைந்த உடம்பு சிறிது வலிமை அடைய, திடீரெனத் தோன்றிய மகிழ்ச்சி உள்ளத்துள் பரவிய பெரிய ஊக்கம் பிடரைப் பிடித்துத் தள்ளவும் விரைந்து எழுந்தேன். செல்லுதல் முதற்கொண்டு அடி எடுத்து வைக்குந் தோறும் நோயின் துன்பம் நீங்க, கடல் நீரைவிட மிகுந்து தோன்றும் மகிழ்ச்சியினால், அவ்விறைவன் மீது பாட வேண்டிய பாடல்கள் எல்லாவற்றையும் பாடிக்கொண்டு நெறியாகச் சென்றேன்; அடுத்து மன்றல் நகராகிய திருத் தணிகையை அடைந்ததும் அச்சம்தரும் இருமடங்கு நோய் களுள் ஒரு மடங்கு நீங்கியதால், இறைவனைக் காண வேண்டும் என்னும் ஆர்வம் எல்லை மீறி ஈர்ப்பதனால், நல்ல மணம் வீசுகின்ற நந்தியாற்றில் மூழ்கிக் குளிக்காமல், ஏழு முனிவர்களுடைய ஏழு சுனைகளில் நீராடாது, அலைந்த

மலைகளுக்குப் பகைவனாகிய இந்திரனுடைய அருள்கயத்தில் நீராடாமலும், வளம் பொருந்திய நாகச்சுனையின் நல்ல நீரில் நீரா டாமலும், திருமால் தீர்த்தத்தில் விரும்பியவற்றைப் பெற வேண்டிக் குளிக்காமலும், தாமரை மலரில் உள்ள நான் முகனது பெரிய சுனையாகிய அழிக்கும் நீரில் மூழ்காமலும், எத்தகைய துன்பத் தொகுதிகளையும் அந்நாளிலேயே நீக்கும் சரவணப் பொய்கை யாகிய பெரிய குளத்து நீரில் மூழ்கிக் குளித்து, மெல்ல மெல்ல திருத்தணிகை மலை மீது ஏறி, காலை, நடுப்பகல், மாலை என்னும் முப்பொழுதுகளிலும் நாள்தோறும் மூன்று மலர்கள் வீதம் மலர்கின்ற நீலோற் பல மலர்கள் பூக்கும் பசிய சுனையை நேரில் கண்டு வணங்கி,

***விளக்கம்***

உறுதுயர் - மிகுந்த துன்பம்

வலியெய்த - வலிமை அடைய

'ஓய்', 'இம்' ஆகியன விரைவு குறித்த ஒலிக் குறிப்புகள்.

உந்த - தள்ள

அஞர்ப்பிணி - நோயின் துன்பம்

உவரி நீர் - கடல் நீர்

தவ எழும் - மிகுந்து எழும்

விலங்க - நீங்க

'மன்றல் நகர்' என்பது திருத்தணிகை நகரைக் குறிக்கிறது. திருத்தணிகையில், சிறந்த புண்ணியத்தலம் என்பதனால் அடிக்கடி திருமணங்கள் மிகுதியாக நடைபெறும் என்பதனால் காரணப் பெயராக, 'மன்றல் நகர்' என்னும் பெயர்

அமைந்தது. வள்ளியை முருகன் மணந்த பிறகு மணக்கோலத்துடன் திகழ்ந்த பதியாதலாலும் இப்பெயர் பொருந்தும்.

'காட்சி ஆர்வம்' என்னும் தொடர், முருகனைக் கண்டு வணங்கும் பேராவலைக் குறிக்கிறது.

'நறுமணம் கமழும் நந்தி நதி' என்பது நந்தியாறு பல்வகை மலர்களையும் மூலிகைகளையும் வெள்ளத்தோடு அடித்துக் கொண்டு ஓடும் ஆறு என்பதனால் நறுமணம் வீசும் தன்மை அந்த ஆற்றுக்கு உண்டு.

ஏழு முனிவர்கள் நீராடுவதற்கென ஏழு சுனைகள் அமைந்துள்ள இடம் தணிகைப் பகுதி. தற்போது, ஏழு கன்னிகையர்கோயில் அமைந்துள்ள இடத்தில் ஏழு சுனைகள் உள்ளன. ஏழு முனிவர்களுக்குரிய சுனைகள் திகழும் இடம், கன்னிகையர்கோயில் உள்ள சோலையாக இருத்தல் கூடும்.

எத்தீர்த்தத்தில் மூழ்காவிட்டாலும், சரவணப் பொய்கையில் நீராடி முருகனை வழிபட்டால், அப்பொய்கையில் நீராடிய அப்போதே எத்தகைய துன்பமும் நீங்கும் என்பதால், தன் எதிரே தணிகைக்குச் செல்லும் அடியாருக்குத் தணிகை சென்று முருகனை வழிபட்ட பிறகு அருள் பெற்றுத் திரும்பும் அடியார், பிற தீர்த்தங்களில் மூழ்கிக் குளிக்காமல், சரவணப் பொய்கையில் நீராடும்படி, அதன் இன்றியமையாமையை உணர்த்துகிறார்.

மீமிசை - மிகவும் மேலே

'மீ', 'மிசை' என்னும் இருசொற்களும், 'மேலே' என்னும் ஒரு பொருள் தரும் சொற்களாகும்.

'நீலப்பைஞ்சுனை' என்பது நீலோற் பல மலர்கள் பூக்கும் இடமாகிய ஒப்பற்ற அரிய சுனை. ஒரு பகற்பொழுதில், காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று பொழுதுகளில் முறையே ஒவ்வொரு நீலோற்பலப்பூ வீதம் மூன்று மலர்கள் மலர்தல் என்பது அற்புதமான செய்தியாகும். ஆசிரியர் கச்சியப்பர் இத்தகைய அரிய அற்புதக் காட்சியை நேரில் கண்டு இந்நூலிலும், தணிகைப் புராணத்திலும் குறிப்பிட்டுள்ளார். இந்நிகழ்ச்சி நாள்தோறும் தவறாமல் நடப்பது என்பதனையும் உணர்த்த வேண்டி, ''வைகல் வைகல் மலர் மூன்று தெரிக்கும் நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது'' என்கிறார். இது வணங்குதற்குரிய தெய்வத்தன்மையுடையது.

*பாடல்*

புரண்டனர் சூழும் பொற்பினர் மிடைதலி
னடியிடப் படாஅ வாரிடை வீதி
யொதுங்குபு பைப்பய வொருமுறை சூழ்ந்து
தூவுமெண் ணிலத்துத் தோயாது வெறுத்த
தேவர்கள் குழுவுந் தேயத் தொழுதியுந்
தடைஇய வாய றடையாது நுழைந்தாங்
கொருவர்மெய் மணிப்பூ ணொருவர்மெய் வடுச்செய
நெருங்கிச் சென்று நித்தில வாணகை
வள்ளி நாயகி மணத்தினை முடித்த
கள்ள வேழக் கடவுளைப் பணியா

வீரரொன் பதின்மர் வார்கழ றாழ்ந்துமற்
றாவயின் வதியு மமரைத் தொழுது
பூதப் பகுப்பும் பூதகா ரணமு
மிந்தியக் கூட்ட மிரண்டுமுக் குணமு
நந்துமாங் காரமு நலத்தகு கரணமு
மிறுவாய் மாயை யெழுவா யேழுஞ்
சுற்ற மென்னத் தோன்றிய வைந்தும்
விராய்நின் றியக்கி மராதுநின் றொளிரு
மாரா வின்ப வருணிலை யம்ம
தீரா மலப்பிணி தீர்த்தருள் கொழிப்ப
வருட்டிரு வுருவுகொண் டவிர்மணித் தவிசின்
ஞான சத்தியுங் கிரியா சத்தியும்
வானவர் கோமான் வளம்பயின் மகளுங்
கானவர் நலங்கூர் கன்னியு மென்ன
விரண்டு பாலுமிருந்தனர் களிப்பக்

*(227 - 251)*

## *தெளிவுரை*

நிலத்தில் புரண்டு வருகின்றவர்கள் எல்லா இடங்களிலும் சூழ்ந்து நெருங்கியிருத்தலால், மற்றவர்கள் அடி எடுத்து வைத்தற்குக் கூட அரிய இடத்தை உடைய தெருவிடத்தில், ஒதுங்கி, மெல்ல மெல்ல ஒருமுறை சூழ்ந்து தூவுகின்ற எள் நிலத்தில் படியாது, வெறுப்படைந்த தேவர்கள் கூட்டமும், நாட்டு மக்கள் கூட்டமும், தடைதற்குரிய வாயல் தடையில்லாமல் நுழைந்து, அங்கே ஒருவர் உடம்பில் அணிந்துள்ள மணிகளும் அணிகளும் ஒருவர் உடம்பில் வடுவை உண்டாக்க நெருங்கிச் சென்று முத்துப் பற்களை

யுடைய வள்ளி நாயகியின் திருமணத்தை முடித்த கள்ள விநாயகக் கடவுளை வணங்கிய பிறகு, வீரவாகு முதலிய வீரர்கள் ஒன்பது பேர்களுடைய வீரக்கழல் அணிந்த திருவடி களைப் பணிந்து, அங்கு வசிக்கும் தேவர்களை வணங்கி, ஐம்பூதங்களின் பிரிவும், அவற்றின் ஏதுக்களும், ஞானம், கன்மம் என்னும் பொறிகளின் இரு தொகுதிகளும், இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் மூன்று குணங்களும், தழைக் கும் யான், எனது என்னும் செருக்குகளும், நன்மை தரத்தக்க மனமும், இறுதியில் மாயை முதல் இவ் ஏழுள்ளும் சுற்றம் என்னும் நிலையில் தோன்றிய ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதை என்னும் ஐந்தனுள்ளும், விரவி நின்று, செயல்படுத்தி அவற்றுடன் கலக்காமல் நின்று, விளங்கும் நிறையாத இன்ப அருள்நிலையே (இறைவன் திருவருளே) தீர்க்க முடியாத மலப் பிணிப்பைத் தீர்த்து அருள்பெறுக, அருளாகிய திருவடிவம் கொண்டு ஒளிசெய்யும் அழகிய இருக்கையின் இடத்தில் ஞான சக்தியும், கிரியா சக்தியும் இந்திரனுடைய வளமை மிகுந்த மகளாகிய தெய்வயானையும் வேட்டுவ மன்னருக்கு நன்மைமிக்க வள்ளியும் முருகனுக்கு இருபக்கங்களிலும் வீற்றிருந்து மகிழ்ச்சி செய்யவும்,

***விளக்கம்***

மிடைதலின் - நெருங்கி இருத்தலால்
பைப்பைய - பையப்பைய, மெல்ல மெல்ல
தூவும் எண் - தூவும் எள்
தேயத் தொகுதி - நாட்டு மக்கள் கூட்டம்

'கள்ள வேழக் கடவுள்' என்னும் தொடர் விநாயகரைக் குறிக்கிறது. தம் தம்பியாகிய முருகனுக்கு வள்ளியை மணம்

முடித்ததற்காகக் கள்ளத்தனமாக யானை வடிவம் அடைந்து வள்ளியை அச்சுறுத்தினதால் 'கள்ள வேழக்கடவுள்' என்று குறிக்கப் பெற்றார்.

நந்தும் - தழைக்கும்
இறுவாய் - இறுதியில்
விராய்நின்று - விரவிநின்று, கலந்துநின்று
மராது - மருவாமல்
தவிசு - இருக்கை

*பாடல்*

கண்டமெய் யடியர் கலவினர் போற்றக்
காணா விண்ணவர் கலவா தேத்தக்
கட்கடை யொழுகுங் கருணை நோக்கமோ
டினிதுவீற் றிருக்கு மெழினேர் காண்டலு
மெஞ்சுநோய் துவர விரியல் போக
விஞ்சுநாற் பொருளு மேவந்து துவன்ற
வாற்றாக் கடுந்துய ரருநர குழப்பவர்
நோற்றமுன் னூழ்நனி நூக்கலு நொடிப்பி
னாயிடை நின்று மாயிருந் துறக்கம்
புக்குழிப் பொலிவித் தொக்கதோற்றத்து
விம்மித மகிழ்ச்சி மெய்தவ வீக்க
வொருகதி விட்டுமற் றொருகதி யடைந்தவர்
மயங்கறி வென்ன வுயங்குமுன் னுயங்க
லெய்யே னாகி யிறுமாப் பெய்தி
செய்முறை தெரியாது திருமுன் னிற்ப
விருமைப் பயனு மெளிதினுற் றளிக்கும்

பூதியுந் திருவுருப் பூச்சுநன் களித்திட்
டென்னைத் தன்வச மாக்கிய வுலகை
யென்வச மாக்கி யென்றுமோ ரியல்பி
னின்றதன் னிலையி னீங்கா திருத்தி
விடாதுவிட் டருள மெய்யருண் மேற்கொண்
டொழியா தொழிந்து வழிவரு கின்றன
னத்தகு பெருமா னருள்விளை யாடலைச்
சற்றிது கேண்மதி தவமேம் படுந.

(252 - 275)

## தெளிவுரை

கண்ட மெய்யுணர்வுடைய முருகனடியார்கள் கூடிப் போற்றக் காணமுடியாத தேவர்கள் கலவாமல் வணங்கவும், கடைக்கண்களிலிருந்து சொரியும் அருள் நோக்கத்துடன் அழகை நேரில் கண்ட அளவில் எஞ்சி நின்ற நோய் முழுதும் நீங்கவும் மிகுந்த நால்வகைப் பொருள்களும் தாமாக வந்து நெருங்கவும், தாங்க முடியாத கடுந்துயரமாகிய அரிய நரகத்தில் துன்புற்றோர் ஆற்றிய முந்தைய நல்ல ஊழ், மிகுதியாகச் செலுத்துதலும், அழித்தலினால் அந்நகரத்திலிருந்து மாபெரும் மேலுலகில் புகுந்தபோது, அழகுபடுத்தி ஒருமித்த தோற்றத்தையுடைய அதிசய மகிழ்ச்சியை மெய்மையான தவச்செயல் மிகுதியாக்கலால், ஓர் ஆதரவை விட்டு மற்றோர் ஆதரவை அடைந்தவர். மயங்கும் அறிவைப்போல் மனம் வருந்துதற்கு முன்னால் வருந்துதல் அடையாதவனாகிச் செருக்கு அடைந்து செய்ய வேண்டிய முறைகளை அறியாமல் முருகனது திருமுன்னர் நிற்கவும், இம்மைக்கும் மறுமைக்கும் உரிய பலன்களை எளிதில் அடைந்து அளிக்கும் திருநீறும் திரு உருவில் (உடலில்) பூசுதற்குரிய சந்தனத் தூளையும்

நன்றாக அளித்து என்னைத் தன்வசப்படுத்திய உலகத்தை என் வசப் படுத்தி என்றும் ஒரு தன்மையில் நீங்காமல் இருக்கச் செய்து விடாமல் விடை தந்து அருள மெய்யுணர்வுக்குரிய அருளை மேற்கொண்டு நீங்காமல் நீங்கி இவ்வழியில் வருகின்றேன்; அத்தகைய முருகப் பெருமானுடைய அருள் விளையாட்டைத் தவத்தால் மேன்மை அடைந்தவனே கேட்டருள்வாயாக!

***விளக்கம்:***

மெய் அடியர் - மெய் உணர்வு உடைய அடியார்கள்

கலவினர் - கலந்தவராக

கண்கடைஒழுகும் - கடைக்கண்களில் சொரியும்

துவர - முழுதும்

இரியல்போக - நீங்க

மேவந்து - தாமாகவந்து

நூக்கலும் - செலுத்துதலும், தள்ளுதலும்

நொடிப்பின் ஆயிடை - நொடிப்பொழுதளவில்

மாயிரும் - மிக்கபெரிய

கதி - அடைக்கலம், ஆதரவு

உயங்கும் - வருந்தும்

கதி நான்கு என்பர். அவை: தேவர், மக்கள், விலங்கு, நரகர்.

உயங்கும் - வருந்தும், மனம் தளரும்.

'திருமுன் நிற்ப' - என்பதற்குப் பரம்பொருளாகிய முருகப்பெருமானை நினைந்து அசைவில்லாம் நிற்றல் என்பது பொருள்.

'இருமைப்பயன்' - இம்மை, மறுமையாகிய இரு பிறவிகளில் செய்த நல்வினை, தீவினைகளுக்கு ஏற்ப இன்பமோ துன்பமோ விளையும். அவ்விளைவினையே 'இருமைப்பயன்' என்றார் கச்சியப்பர்.

திருவுருப்பூச்சு - உடலில் பூசும் சந்தனத்தூள்.

உலக பந்தங்களில் ஈடுபடும்போது நாம் உலகத்தின் வசமாகிறோம். பற்றறுத்த உடனே உலகம் நம்வசமாகிறது. எனவே, 'என்னைத் தன்வசம் ஆக்கிய உலகை என் வசம் ஆக்கி' என்கிறார் ஆசிரியர்.

இறைவன் தன்நிலையிலிருந்து எப்போதும் நீங்காதவன். அத்தகைய இறைவன் அடியாரை வாடாது விட்டருளினான். 'விடாது' என்பது, முருகனை. மனத்தளவில் நினைத்தல் விடாமை; அகத்தில் அடியாரை விடாமல் பற்றியிருப்பவன் இறைவன்; உடலளவில் அவனை வழிபட்ட பிறகு விட்டு நீங்குதல் பற்றி 'விட்டருளினான்' என்றார். அதே நிலையில் அடியாரும் மனத்தளவில் இறைவனை நினைப்பதனை விட்டொழியாது. வழிபட்ட பிறகு, திருமுன்னர் நிற்காமல் அவனை விட்டொழிகின்றனர்.

'தவமேம்படுந' என்னும் முன்னிலை விளியால், தவச்செயல் அத்தவம் செய்பவர்களை உயர்த்தும் தன்மையுடையது என அறியலாம். பற்றறுத்து உயர்தற்குத் தவம்

சிறந்தது. ஆன்மாவைத் தவச் செயல் உயர்த்தும் தன்மை உணர்த்தப்பட்டது.

*பாடல்*

விச்சொன் றின்றி விளைவு மிக்காக்கியும்
விச்சுமிக் கிருப்ப விளைவுமுழு தொழித்து
மொளிதலை வளர்ப்ப வொளிகளைத் தணித்து
மழுக்கினைக் கழுவ வழுக்கினை யேற்றியு
முறுந்தொழிலாளர்க் குறாதுசே ணகன்றும்
வறுந்தொழிலாளர்க் குவந்துடன் கலந்தும்
விதித்தநல் விதிகளை விலக்கென வுவர்த்தும்
விலக்கினை விதியென மேதக நயந்து
மித்தகு தொழின்மை நித்தலு மியற்றிப்
பொற்றபே ரின்பருள் பெற்றிய னஃதான்
றிருமுது குரவ ரெழுவாய்ச் சுற்றமொடு
துயரிலங் குலகந் தோற்றுதற் பொருட்டுத்
தந்தை யென்ன வைந்துமுக னாகியு
மன்னை யென்ன மனோன்மனி யாகியும்
முன்முறை தந்தையர் தாய ரென்ன
நாதஞ் சிவமே நலத்தகு விந்து
மேதகு சத்தி வேறுவே றாகியும்
பின்முறை தந்தையர் தாய ரென்ன
மகேச னுருத்திரன் மகேசையுமை யாகியுந்
தமைய னென்னத் தாமரை மருட்டு
மூவிரு முகமு முன்னான்கு கரமு
மருவிவீற் றிருக்கு மொருதா னாகியுங்

கடப்படு மிரண்டு கைகோ ளியங்க
நான வார்குழ லகையிழை யானையைக்
கானவ ரரும்பெறற் காமரு மாதினைக்
கற்பினிற் களவினிற் பொற்புற மணந்தும்
பொருட்டுறை முழுதும் புரையின்றி நடப்ப
வண்டகோ டிகளு மரைக்கணத் தளவ்வையின்
வறிதுநகை தோற்றி யிறுவது புரியு
மெறுழ்வலி யாற்ற லெய்யான் போல
மந்திரத் தூது செலவிகன் மற்று
மாற்றிவெஞ் சூர்வலி காற்றியுல கோம்பியு
மெல்லா மறிந்தறி விக்குமவ் வியல்பைக்
கண்கூ டாகக் காட்டுவ னதாஅன்று

(276 - 310)

## தெளிவுரை

விதை ஒன்று இல்லாமல் விளைச்சலை மிகுதியாக ஆக்கியும், விதைகள் மிகுதியாக இருக்கவும் விளைச்சல் முழுவதும் இல்லாமல் செய்தும், தலையான அறிவை வளர்ப்பதற்காக உலகைப்பற்றிய அறிவுகளைக் குறைவாக்கி யும், உயிர்களின் மலமாகிய மாசினைக் கழுவுவதற்கு மலமாகிய மாசினைப்பிறகும் ஏற்றியும், அடைய முயலும் தொழிலாளர்களுக்கு அடைய முடியாதபடி, தொலைவில் சென்றும், அடைய முயற்சி செய்யாத வறிய தொழிலாளர் களிடம் வந்து அவர்களுடன் கலந்தும், விதித்த நல்ல விதி களை விலக்குக என வெறுத்தும், விலக்கப்பட்டவற்றை விதிக்கப்பட்டவை என்று மேன்மையாக விரும்பியும்,

இத்தகைய செயல்களை நாள்தோறும் செய்து, நிலையான பேரின்பம் (வீடுபேறு) அருளும் குணத்தன், இரு தொன்மை யான சுத்தசிவமும் சிற்சத்தியும் ஆதிச் சுற்றங்களுடன் துன்பம் விளங்கும் உலகங்களை உருவாக்கும் பொருட்டு, தந்தை என்று சொல்லும்படி ஐந்து முகங்களை உடைய சிவமாகியும், தாய் என்று சொல்லும்படி மனோன்மணியாகியும், முற்பட்ட உறவு முறையாகத் தந்தையர் தாயர் என்னும்படி நாதம் சிவமும், நன்மைக்குத் தக்க விந்து மேன்மையான சத்தியும் என்று வெவ்வேறாகியும், பிற்பட்ட உறவுமுறையில், தந்தையர் தாயர் என்னும்படி மகேசன் உருத்திரன் ஆகியும், மகேசை உமை யாகியும், அண்ணன் என்னும்படி யானை முகன் ஆகியும், மகன் என்னும்படி, தாமரை மலரை மருட்டும் ஆறு முகங்களும் பன்னிரண்டு கைகளும் பொருந்தி வீற்றுள்ள ஒப்பற்ற தானே யாகியும், கடமைப்படுவதற்கு உரிய இரண்டு ஒழுக்கங்களும் நடக்க, கத்தூரி மணமுள்ள நீண்ட கூந்தலும், ஒளிபொருந்திய அணிகலன்களையும் உடைய தெய்வயானையையும், வேட்டு வர்களுடைய பெறுதற்கு அரிய அழகிய வள்ளியையும் முறையே கற்பொழுக்கத்திலும் களவொழுக்கத்திலும் அழகுறத் திருமணம் முடித்தும், பொருளுக்குரிய துறைகள் எல்லாம் குற்றமின்றி நடக்கவும் அரைக்கணப் பொழுதில் கோடி அண்டங்களும் வறிய நகைப்பால் படைத்து இறுதி யடையச்செய்யும் மிகுந்த தம் ஆற்றலை அறியாதவர் போன்று, அமைச்சர்களுடன் ஆய்தலும் தூதுவிடுதலும் பகைவர் மேல் செல்லுதலும், போரிடலும் ஆகியவற்றுடன் பிறவற்றைச் செய்து, உலகத்து உயிர்களைப் பாதுகாத்தும், எல்லாவற்றை யும் அறிந்து கொண்டு அறிவிக்கும் அந்த இயல்பினைக் கண்கூடாகக் காட்டுவன்.

***விளக்கம்***

விச்சு - விதை, வித்து

ஒளிதலை வளர்ப்ப - தலைமையான ஞானத்தை வளர்ப்பதற்கு

ஒளிகளை - சிற்றறிவுகளை

'அழுக்கு' என்பது இங்கு ஆணவ அழுக்கைக் குறிக்கிறது.

'சேண்அகன்றும்' என்பது, வேதங்கள், பிரம்மா முதலானோர் பல நாள் வழிபட்டும் தேடியும் அவர்கள் இடம் நெருங்காத தொலைவில் அகன்று நிற்கும் இறைவனது தன்மையைக் குறிக்கிறது.

எளிய அடியார்களுக்கு நினைத்த வடிவத்தில் தோன்றி அவர் உள்ளத்தில் நிற்பான் இறைவன் என்பதனை 'உடன் கலந்தும்' என்றார் ஆசிரியர்.

உவர்த்தும் - வெறுத்தல்

மேதக - மேன்மையாக

பொற்ற - நிலையான

பேரின்பு அருள் - வீடுபேறு.

'இருமுதுகுரவர்' என்னும் தொடர் சக்தியையும் சிவத்தையும் குறிக்கிறது.

'ஐந்து முகன்' என்பது சிவபெருமானைக் குறிக்கிறது.

தந்தி முகன்' - யானை முகத்தைக் கொண்ட விநாயகர்.

ஒரு தானாகியும் - ஒப்பற்ற தாமே ஆகியும்

'நானவார் குழல் நகையிழை யானையை' என்னும் தொடர் தெய்வயானை நாச்சியாரைக்குறிக்கிறது.

நானம் - கத்தூரி மணம், வார் - நீண்ட; குழல் - கூந்தல்
நகைஇழை - ஒளிபொருந்திய அணிகலன்கள்.

'இரண்டுகைகோள்' ஞானம், கிரியை ஆகிய இருகைகோள்கள்.

'கற்பியல்' என்பது பெற்றோர்கள் விரும்பியபடி, தலைவனும் தலைவியும் திருமணம் முடித்தல், 'களவியல்' என்பது எப்போதும் ஒரு தன்மையராகத் தலைவனும் தலைவியும் எதிர்பட்டுப் புணர்ந்து வருதல்.

புரையின்றி - குற்றமின்றி
இறுவது - அழித்தல்
எறுழ்வலி - மிக்க ஆற்றல்
வெஞ்சூர் - கொடிய சூரபதுமன்
அதான்று - அதுவன்றியும்.

***பாடல்***

வகை யுருவாய் மூவுல குயிர்த்து
மூவகை யுருவு முயங்காப் பரம்பொருள்

பந்தம் வீடு பல்லுயிர்க் கமைத்தும்
பந்தம் வீடு படாத பெருந்தகை
யாருயிர்க் குயிரா யமைந்தன நடாவியு
மாருயிர் காட்சிக்கணுகா வருந்திறற்
றானாய் நின்று தற்காண் டனிமுத
லளிகளி னளியா வளிகளுஉங் களிய
னொளிகளி னொளியா வொளிகளுஉங் கொளியன்
வெளிகளின் வெளியா வெளிகளுஉங்கு வெளிய
னளவினி னளவா வளவினுஉங் களவ
னின்னா னொருவனை முனனுபு சென்றவன்
பூங்கழற் சேவடி போற்றுதி யாயின்
பேரஞ ருறுத்த பேதுறு நோயுங்
காரண நோயுங் கையிகந் திரியக்
கடைக்கணித் தருளிக் கரையினாற் பொருளுங்
கொடைக்கட னீயிர் குறித்த வளவையி
னெண்மடங் காற்றி யென்றுந் தீரா
வகம்படித் தொழின்மையி னமுழ்த்துவ னன்றே

*(311 - 329)*

## *தெளிவுரை*

சிவன், திருமால், நான்முகன் என்னும் மூன்று கடவுளர் வடிவாய், மூன்று உலகங்களை உருவாக்கியும், மூன்றுவகை உருவங்களையும் தழுவாத மேன்மையான மெய்ப்பொருளாய், அருமையான உயிர்களுக்கு உயிராய் அமைந்தவற்றைச் செயற்படுத்தியும் அரிய உயிர்களின் காட்சிக்கு நெருங்காத அரிய ஆற்றல் உடைய இறைவன் தான் தனியாய் நின்று தன்னை அறிந்துள்ள ஒப்பற்ற

முதற்பொருளாய், பந்தத்தையும் வீடுபேற்றையும் பல உயிர் களுக்கும் அமைத்துத்தந்தும், பந்தமும் வீடபேறும் தாம் அடையாத பெருந்தகைமையராய், அரிய உயிர்களுக்குள் உயிராய் அமைந்தவற்றை நடத்தியும் (செலுத்தியும்) அரிய உயிர்களின் காட்சிக்கு அணுகாமல் உள்ள அரிய திறனுள்ள வராகத் தானாக நின்று தான் மட்டும் உணர்தற்குரிய ஒப்பற்ற முதற்பொருளாய், அருள்களின் அருளாகவும் அருளுள் உள்ளவைகளுள் எல்லாவற்றுள்ளும் தண்ணிய அருளாகவும் அவற்றையும்விட மேன்மையுடைய தலைமையான அருளாள ராய், ஒளிகளுள் ஒளியாகவும் ஒளிகள் அனைத்தையும் விட ஒளியுள்ளவனாகவும், வெளிகளின் வெளியாகவும், வெளி களைவிட மேன்மையுடைய வெளியராய், அளவுகளின் அள வாகவும் எல்லா அளவுகளையும் விடப் பேரளவினராய், இத்தன்மையராகிய ஒருவரை மனத்துள் எண்ணியவாறு சென்று அழகிய கழல்கள் அணிந்த அவருடைய சிவந்த திருவடிகளைத் தொழுவாய் ஆயின், பெருந்துயரத்துள் ஆழ்த்து கின்ற அறிவுமயங்குதற்குரிய நோயும் அதன் காரணமாக அமைந்த நோயும் கைவிட்டு அகலுமாறு கடைக்கண் புரிந்து அருள் செய்து எல்லையில்லாத நான்கு பொருள்களையும் கொடைக்கடனாக நீங்கள் குறித்த அளவைவிட எட்டுமடங்கு அதிகமாக அருள் செய்து, அந்தர்முகமாக நின்று செய்யும் தொண்டு செய்தலின் கண் ஆழ்த்துவர்,

### விளக்கம்

மூவகை உரு - சிவன், திருமால், நான்முகன் ஆகிய மூன்று வகையான வடிவங்கள்

பரம்பொருள் - மேன்மையான பொருள்

மூவகை உருவாய்' என்பதனால் மூன்று உருவங்களுக்கும் உரிய படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் உரியவன் சிவபெருமான் என உணரலாம்.

வீடு - வீடுபேறு

'பந்தம் வீடுபடாத பெருந்தகை' என்றதனால் இறைவன், எல்லா உயிர்களையும் படைத்துப் பந்தம் வீடு ஆகியவற்றுள் அழுந்தச் செய்தாலும், தான் அவ்வாறு அவற்றிற்கு ஆட்படாத தனித்தன்மையுடையவன். அதனால்தான் வள்ளுவர், 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்றார்.

'நடாவியும்' - நடத்தியும், செலுத்தியும்.
அளி - அருள்தன்மை

'அளிகள்' என்பதைப் பெற்றோர்களும் ஆள்பவரும் செய்யும் அருள் தன்மைகளாக்க் கொள்ள வேண்டும். 'தண்ணளி' என்பது மழை, முழு மதி முதலியன செய்யும் அளிகள்.

விளக்கொளி முதலியன சிறிய ஒளிகள்; கதிரவன் ஒளியும் நிலவொளியும் பேரொளிகள். 'வெளிகளுஉங்கு வெளியன்' என்னும் தொடர் ''எல்லாவெளிகளையும்விட பெருவெளியாக விளங்குபவன் இறைவன்'' என்னும் பொருளைத் தருகிறது. பெருவெளிகளுள் மனவெளியும் ஒன்று.

எண்ணல் எடுத்தல் முகத்தல் முதலியன அளவுகள்.

மிகுந்த அளவு காட்சி அளவாகும். தனி அளவு என்பது முதல், நகு, முடிவு ஆகியவை அற்றது. இவையனைத்தும் கடவுளின் ஒப்பற்ற ஆற்றலையும் அளவையும் எல்லையையும் குறிப்பன.

முன்னுப சென்று - நினைந்தவாறு சென்று
பூங்கழல் - அழகிய வீரக்கழல்
சேவடி - சிவந்த திருவடி.

இறைவன் திருவடிகளை வணங்குதல் என்பது வீடுபேற்றிற்குரியது. அதனால்தான் வள்ளுவர்,

''கற்றதனா லாய பயனென்கொல் வலறிவன்
**நற்றாள்** தொழாஅர் எனின்,'' *(குறள் : 2)*

''மலர்மிசை ஏகினான் **மாணடி** சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்'' *(குறள் : 3)*

''வேண்டுதல் வேண்டாமை **இலான்அடி** சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல'' *(குறள் : 4)*

என்னும் குறட்பாக்களிலும்,

''**தாள்** சேர்ந்தார்க்கு'', ''எண்குளத்தான் **தாளை**''

''இறைவன் **அடி**'' என்னும் தொடர்களிலும் முறையே, நற்றாள் மாணடி, இலான்அடி, தாள், தாளை, அடி

என்றெல்லாம் இறைவனுடைய திருவடிகளை வணங்குதல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

''முன்பு சென்று அவன் பூங்கழல் சேவடி போற்றுதி ஆயின்'' எனக் கச்சியப்பர் குறிப்பிட்டமை போன்றே, திருமுருகாற்றுப்படை ஆசிரியர் நக்கீரரும், ''சேவடி படருஞ் செம்மலுள்ளமொடு'' என்றார்.

பேர்அஞர் - பெருந்துயரம்
பேதுறு - பேதமை அடையச் செய்யும், மதிமயங்கச் செய்யும்.
கையிகந்து இரிய - கைவிட்டு நீங்க.

*பாடல்*

யாடகப் பசும்பொற் பாடகச் சீறடி
நாடக மகளிர் நவிற்றிய வாடற்
சிலம்பு கிண்கிணி தீங்குழன் முழவ
முரசந் தூரி முழங்கொலி யானும்
விண்டல முரிஞும் வியன்மணிப் புரிசைக்
கொண்டல்கண் படுக்குங் கோபுர நிரைக
ளாடுகொடி சுமந்த மாடநெடு மாளிகை
யின்னன பிறவு மன்னுத லானு
மொலிதிரைக் கட்லு மோங்குபல் வரையு
முடங்குதொக் கண்மி யொண்டுறை யாடி
யிருபகுப் பினவா யிருகரை மருங்கும்
நோற்றன வதியும் பேற்றினைத் தெரிக்கு
மும்மையு மளிக்கு மூவா முழுமுத

லைம்முக னாகி யமர்ந்தவீ ரட்டமு
மறுமுக னாகி யமர்ந்த கீழ்க் கோட்டமும்
பொன்னு மணியும் புதுமலர்க் குவையும்
திரைக்கயிற் றூஉய்த் திளைத்தெழுந் தொழுகு
நந்தி யாற்று நறும்புனன் மடுக்குங்
குரங்குகதிர்ச் சாலியுங் கொழுந்தீங் கரும்புங்
குலைப்பூங் கதலியுங் கோட்டெங் கினமுங்
கோள்கண்மீப் பரிக்கும் பாளைக் கமுகும்
வயின்வயிற் பொதுளி வளம்பல வுறந்த
முருகலர்ப் பண்ணை யொருபுறஞ் சூழ

*(330 - 352)*

## தெளிவுரை

ஆடகம் என்னும் பசும்பொன்னால் அமைந்த பாடகம் என்னும் காலணியணிந்த சிறு அடிகளையுடைய நாடக மகளிர் நடத்திய ஆடலில், சிலம்பு, கிண்கிணி, இனிய புல்லாங்குழல், மத்தளம், முரசம், தூரி ஆகியவற்றின் முழங்கும் ஒலிகளாலும்,

விண்ணிடத்தைத் தேய்க்கும் மிகுந்த மணிகள் பதித்த மதில்களும், மேகங்கள் உறங்கும் கோபுரவரிசைகளும், ஆடும் கொடிகளைச் சுமந்த மாடங்களைக் கொண்ட உயரிய மாளிகை களும் இவை போன்ற மற்றவையும் நிலைபெற்றிருப் பதனாலும், ஒலிக்கும் அலைகளைக் கொண்ட கடலும் உயர்ந்த பல மலைகளும் ஒருங்கே சேர்ந்து, மாறுபட்டு நன்மை தரும் நீர்த்துறையில் நீராடி, இரண்டு பிரிவுகளாய் இரு கரைகளின் பக்கங்களிலும் தவஞ்செய்தனவாகத் தங்கும் பேற்றினைத் தெரிவிக்கும், இம்மை, மறுமை, வீடுபேறு

ஆகிய மும்மையும் அளிக்கும் மூப்படைதல் இல்லாத முழுமுதலாகிய முருகன் ஐந்து முகங்களைக் கொண்டு வீற்றிருக்கின்ற வீரட்டமும், ஆறுமுகக் கடவுளாகி அமர்ந் துள்ள கீழ்க்கோட்டமும், பொன்னும் மணிகளும் புதுமை யான மலர்க் கொத்துகளையும் அலைக்கரங்களால் தூவி அனுபவித்து எழுந்து ஓடும் நந்தியாற்றின் நல்லமணம் பொருந்திய நீரை உட்கொள்ளும் வளைந்த கதிர்களை யுடைய சாலி நெல்லும், பருத்த இனிய கரும்புகளும் குலை களையும் பூக்களையும் கொண்ட வாழையும் தெங்கின் வகைகளும், விண்ணில் உள்ள கோள்களைத் தம்மீது தாங்கும் பாளைகள் உடைய பாக்கு மரங்களும் எல்லா இடங்களிலும் நிறைந்து வளங்கள் பல அளிக்கும் அழகு மலர்ந்த மருதநிலம் ஒருபக்கம் சூழவும்,

***விளக்கம்***

'ஆடகப்பசும்பொன்' என்பது பொன் வகைகளுள் சிறந்ததாகும்.

பாடகம் - பெண்டிர் அணியும் காலணி
சீறடி - சிறுமையான அடி
நவிற்றிய - நடத்திய, ஆடிய
தூரி - முரசப்பறை
உரிஞும் - தேய்க்கும்
புரிசை - மதில்
கொண்டல் - மேகம்
நிரைகள் - வரிசைகள்
இன்னன - இத்தகையவை
மன்னுதல் - நிலைபெற்றிருத்தல்

'பன்னிறமலை' என்பது பல்திறப்பட்ட வண்ணங்களில் அமைந்த மலைகள்; அவை, வெண்மலை, பொன்மலை, நீலமலை முதலியன.

தீர்த்தம் - சரவணப்பொய்கை

ஒண்மை - நன்மை, தூய்மை

மும்மை- இம்மையும் மறுமையும் வீடுபேறும் (இப்பிறவி, மறுபிறவி, பிறப்பின்மை)

ஐம்முகன் - சிவபெருமான்

'முழு முதல்' என்பது ஒப்பற்ற இறைவனைக் குறிக்கிறது. வள்ளுவரும், இதனாலேயே, இறைவனை, ''தனக்குவமை இல்லாதான்'' என்றார்.

கோட்டம் - கோயில்

தூஉய் - தூவி

மடுக்கும் - உண்ணும்

குரங்கு - வளைந்த

*பாடல்*

வவரை துவரை யரிற்கதிர் வரகு
சாமை யிறுங்கு தழைந்தன விளையுங்
கொல்லை முல்லை கோழிணர்ப் பூவையும்
பந்தர் மாதவி யுந்திய கோங்கும்
பைங்காற் கொன்றை பசும்பொற் சுண்ணமும்
வளியுளர்ந் தெடுப்ப மறுபுல வரைப்பும்

போர்த்தன கமழ்ந்து பொறிவண்டழைக்கு
மரும்புலப் புறவ மொருபுறஞ் சூழச்
செருந்திமந் தாரங் குருந்துவழை பாடலம்
கோங்கு சண்பகம் வேங்கைமகிழ் சந்தனம்
குங்கும மரவங் கோழகிற் கப்புர
மில்ல மாவிரை வில்லம் பாங்கர்
பிடர்ஞெமை நமையாண்டடர்வரை யெகின்சே
வசோகந் தேக்கே யாத்தி சூத
மருது போதி வஞ்சி காஞ்சி
ஞாழல் புன்னை நரந்தை மாதுளை
பொருட்டரை யிருப்பை பூஞ்சினைச் சரள
முன்னம் பலாசு முருக்கை வருக்கை
சோதி மாமரந் தொத்தின நாக
மன்றி யனைத்துந் துன்றிய கறிக்கொடி
மல்லிகை முசுண்டை மற்றும் பரித்து
மணங்கமழ் காமர் வல்லி யொன்றே
யிணங்கு பூத் தருந்த னிகழ்ச்சியை நாடி

*(353 - 375)*

## தெளிவுரை

அவரை, துவரை, சிறுதூறுகள் போன்ற கதிர்கள் கொண்ட வரகு, சாமை ஆகியன இறுகி நெருங்கி விளையும் கொல்லைகளும், முல்லையும், கொழுமையான பூங்கொத்துக் கள் கொண்ட காயாவும், பந்தலில் படர்ந்த மாதவிக் கொடி யும், உயர்ந்த கோங்கமும் பசிய அடிப்பக்கம் கொண்ட கொன்றையும், பசிய அழகிய மகரந்தத்தூளும், காற்றினால் அசையவும், மறுநிலத்தின் கண்ணும் போர்த்தியபடி மணம்

வீசிப் புள்ளிகளுள்ள வண்டுகளை அழைக்கும் அரிய குறிஞ்சி நிலம் ஒருபக்கம் சூழ்ந்திருக்க, செருந்தி, மந்தாரம், குருந்து, வழை, பாடலம், கோங்கு, சண்பகம், வேங்கை, மகிழ் சந்தனம், குங்குமம், மரவம், கோழகில், கப்புரம், இல்லம், ஆவிரை, வில்லம், பாங்கர், பிடர், ஞெமை, நமை, அவ்விடம் அடர்ந்த மலையில், எகின், செம்மரம், அசோகம், தேக்கு, ஆத்தி, சூதம், மருது, போதி, வஞ்சி, காஞ்சி, ஞாழல், புன்னை, நாந்தை, மாதுளை, பொருக்காகிய அடியைக் கொண்ட இருப்பை, அழகிய கிளைகளையுடைய சரளம், மேல்பலாசு, முருக்கை, வருக்கை, சோதி மரம், தொற்றிக்கொண்ட நாகம் ஆகியவை அல்லாமல், அனைத்திலும் நெருங்கிப் படர்ந்த மிளகுக்கொடி, மல்லிகை, முசுண்டை முதலிய கொடிகளும், மணம் வீசுகின்ற அழகிய வல்லிக்கொடி ஒன்றே தக்க பூ தரும் தன் இழிவை எண்ணி,

## விளக்கம்

அரில் - சிறுதூறு
ததைந்தன - நெருங்கினவாய்
கோழிணர்பூவை - கொழுமையான பூங்கொத்துக் களையுடைய காயா.
உளர்ந்து - அசைந்து
புறவம் - குறிஞ்சிநிலம்
இல்லம் - தேற்றா
சே - செம்மரம்
போதி - அரச மரம்
பலாசு - வெண்முருக்கு
சோதிமாமரம் - பெருமை மிக்க சோதி மரம்.

'காமர்வல்லி' என்பது அழகுடைய வல்லிக்கொடி. 'காமர்வல்லி' என்னும் கொடி கற்பகமரத்தின் மீது படர்ந்துள்ள பூங்கொடி என்றும் சொல்லப்பெறுகிறது.

இணங்கு - தக்க, ஏற்ற

நாடி - ஆய்ந்து, எண்ணி

### பாடல்

வசைபடத் தத்த மிசைவிளக் குவபோற்
பொறிவரிச் சுரும்பும் வெறிநுகர் தேனுந்
தோகைமா மயிலுந் தொடிக்கட் பூவையுங்
கிள்ளையுங் குயிலுந் தெள்ளுகுரற் காட்டி
வண்டளிர்ப் பொதும்பர் மருங்குகால் வளைஇ
நுண்டளி நறுந்தே னோலாது திவளுந்
ததைமலர்ச் சினைய தருவைந் துடுத்த
பொன்னகர் வறுமையை முன்னிநக் காங்கு
வேர னரன்றுக்க வெண்மணிக் குப்பையும்
பறழ்பற் பேழ்வாய்ப் பின்முன் பார்வைச்
சிங்கவல் லேறு பொங்குசினந் திருகி
யெழுந்துதாய்த் துமிப்ப விருங்கடா யானை
மத்தகம் பிளந்து மாயிருங் குன்றத்து
வெண்புன லருவி வீழ்வன போலச்
சலசல வுக்க தரளக் குவாலு (376 - 390)

### தெளிவுரை

வசை அழிந்ததால் தம்தம் இசையை விளக்குவன போல், புள்ளிகளும் இசையும் அமைந்த சுரும்புகளும்

கள்ளை உண்ணும் தேனும், தோகையுடைய பெரிய மயில் களும் வளையல் போன்ற கண்களையுடைய நாகணவாய்ப் பறவைகளும் கிளிகளும், குயில்களும் தெளிவான குரல் ஓசையைக்காட்டி, பசுமையான தளிர்களுள்ள சோலையின் பக்கம் இசைபயில, நுண்ணிய மணமுள்ள துளியளவு தேனும் கொண்டிராமல், துவளுகின்ற மலர்கள் நெருங்கிய கிளை களையுடைய ஐந்து மரங்களை உடைய பொன் நகரினது வறுமையை எண்ணி நகைத்ததனைப்போல, மூங்கில் கணுக்களிடத்துப் பீறிட்டு உதிர்ந்த வெள்ளை நிறமுடைய மணிகளாகிய முத்துக்களின் குவியலும், பிறழ்ந்த பற்களை யுடைய பிளந்த வாய்கொண்டு, பின்னும் முன்னும் பார்வை யிடும் வலிமையான ஆண்சிங்கம், மிகுந்த சினத்துடன் முரண்பட்டு எழுந்து, பாய்ந்து தாக்க, பெரிய ஆண் யானையின் மத்தகம் பிளந்து, மிகப்பெரிய மலையில் வெண்ணீருடைய அருவிகள் வீழ்வன போல் சலசல என்று உதிர்ந்த முத்துக்குவியலும்,

## விளக்கம்

பொறி - புள்ளி

தொடிகண் - வளையல் போன்ற கண்

பூவை - நாகணவாய்ப்புள்

கிள்ளை - கிளி

வண்மை - பசுமை

தளி - துளி

நறுந்தேன் - நறுமணமுள்ள தேன்

திவளும் - துவளும்

நக்காங்கு - நகைத்ததைப்போல்

வேரல் - மூங்கில்

நரன்று - ஒலித்து

துமிப்ப - அறுக்க, வெட்ட

கடாயானை - ஆண் யானை

மத்தகம் - சென்னி, நெற்றி

தரளக்குவாலும் - முத்துக்குவியலும்

## பாடல்

நிலவுராய்த் தவழ நெமிர்ந்தன மிளிருங்
கவான்மலைப் புனத்துக் கதிர்த்தினை காக்கு
முவாமதி முகத்தா ரோச்சினர் விடுக்குங்
கவணையின் மணியோ கங்குற் கானவர்
விலங்கினந் துரக்கு மிலங்குகூர்ங் கணையோ
வலைத்தர விசும்பி னிலைத்தரு கலன்கள்
பல்வகை மின்கொடி யொல்கிவீழ்ந் தென்ன
வெல்வரை நிரையும் பில்குகதிர் மணிப்பூங்
காழுந் தாமமுங் கவினத் தைஇய
மண்டப மேடை மாடமே னிலைக
ளியங்கா நிலைத்தே ரியங்குமணிப் பஃறேர்
விமானவூர் திகளும் வேற்றுமை தோற்றா
வளம்பல தழீஇயெம் மருங்குமெய் யடியா
ரிடுமகிற் றூமமு மெக்கரிற் குவைஇய
படரொளி யூட்ட பளிதக் குப்பை
கான்றதீம் புகையுங் கழுமிவிண் கெழுமி *(391 - 406)*

## தெளிவுரை

நிலவுஒளி விரித்துப்பரவி ஒளிரும் மலைப்பக்கத் தில் உள்ள வயல்களிடத்தே, தினைக்கதிர்களைக் காக்கும் பொருட்டு முழு மதி போன்ற முகத்தையுடைய மகளிர் எறிந்து வீசும் கவணையின் மணிக்கற்களோ, இருட்டைப் போன்ற நிறமுடைய வேட்டுவர்கள் விலங்கினங்களைப் பிடிக்கச் செலுத்தும் விளங்கும் கூர்மையான அம்புகளோ அலைத்து விண்ணிடத்தே நிலைத்த அணிகலன்களும் பலவகை மின்கொடிகளும் தளர்ந்து விழுந்தன போல் வெல்லும் மலைகளின் வரிசையும் கதிர் ஒளியை உமிழும் மணி வடங்களும் மாலைகளும் அழகாக அமைந்து நெருங்கிய மண்டபங்களும் மேடைகளும் மாடங்களும் மேல் நிலை களும், இயங்காத நிலைத் தேர்களும், இயங்குகின்ற மணிகள் பதிக்கப் பெற்ற பலதேர்களும், விமான ஊர்திகளும் வேற்றுமை காண முடியாத பல வளங்களைத் தழுவிக் கொண்டு, எல்லாப்பக்கங்களிலும் மெய்யுணர்வு கொண்ட அடியவர்கள் இடும் அகில் புகையும் எக்கர்மணலைப்போல் குவிந்த பரவும் ஒளியை ஊட்டக் கப்பூரக் குவியல்கள் கக்கிய இனிய புகையும் ஒன்று சேர்ந்து விண்ணில் பரவி,

## விளக்கம்

காவன்மலை - மலைப்பக்கம்

புனம் - கொல்லை, வயல்

'உவாமதிமுகத்தார்' என்னும் தொடர் அழகிய முழுமதி போன்ற முகத்தினராகிய மகளிரைக் குறிக்கிறது.

பில்கல் - பொசித்தல்

கங்குல்கானவர் - இரவைப்போன்ற நிறமுடைய வேட்டுவர்கள்

அலைத்தர - துன்புறுத்தலால்

கவின - அழகாக

ததைஇய - நெருங்கிய

பஃறேர் - பலவகைத் தேர்கள்

தழீஇ - தழுவி

தூமமும் - புகையும்

குவைஇய - குவிந்த

பளிதம்குப்பை - கப்பூரக்குவியல்

கழுமி - சேர்ந்து

கெழுமி - பரவி

## பாடல்

இமையார் நாட்ட மிமைப்பன செய்ய
மல்ல லாவண மறுகும் வீதியு
நாடொறு மெழிலா னவநவ மாகி
யிமைக்குநர் நாட்ட மிமையாமை செய்ய
மண்டலம் விண்டல மாற்றிய தென்ன
விறும்பூது பயவா வேர்குலாய்க் கிடந்த
திசைகாப் பாள ரிசைநிறை தேவ
ரலரவ னெடுமா லாதிய கடவுளர்
முதுக்குறை யன்பின் முறைமுறை பழிச்சச்
சாறுநா ளல்லது வேறுநா ளறியா

துலகமுழு தோம்புபல் சிறப்பி
னிலைபெறு தணிகை மலைகிழ வோனே. *(407 - 418)*

## தெளிவுரை

இமையாத தேவருடைய கண்கள் இமைக்கும்படிச் செய்ய, வளம் மிக்க அங்காடி வீதியும் பிற வீதிகளும் அழகால் புதிது புதிதாக ஆகி இமைக்கும் மக்களின் கண்களை இமைக்காமல் செய்ய, மண்ணுலகம் விண்ணுலகமாகவும், விண்ணுலகம் மண்ணுலகமாகவும் மாற்றம் பெற்றன என்று சொல்லும்படி, வியப்பு உண்டாக்கி அழகு குலாவிக் கிடக்கின்ற, திசைகளைக் காக்கும் தேவர்கள், புகழ் நிறைந்த தேவர்கள், நான்முகன், திருமால் முதலிய கடவுளர்களும் பேரறிவுடைய அன்பினால் வரிசையாக நின்று வணங்க, திருவிழாநாள் அல்லாது வெற்று நாள் காணுதல் அறியாது, உலகம் முழுதும் பாதுகாக்கும் பல சிறப்புக்களை உடைய, நிலைபெற்றுள்ள தணிகைமலைக்குரியவன்.

## விளக்கம்

இமையார் - தேவர்கள்
நாட்டம் - கண்கள்
மல்லல் - வளம்
ஆவணமறுகு - அங்காடி வீதி
நவம் - புதிது
இமைக்குநர் - கண் இமைக்கும் மக்கள்
மண்டலம் - மண்தலம், உலகம்
விண்டலம் - விண்தலம், தேவர் உலகம்
இறும்பூது - வியப்பு

ஏர் - அழகு

குலாய் - குலாவி, கொண்டாடி

இசைநிறை - புகழ் நிறைந்த

அலரவன் - நான்முகன்

நெடுமால் - திருமால்

ஆதிய - முதலிய

முதுக்குறை - பேரறிவு

பழிச்ச - வழிபட

சாறுநாள் - விழாநாள்

வேறுநாள் - விழா இல்லா வெறுமை நாள்.

திருத்தணிகையில் நாள்தோறும் திருவிழாக்களும் மணவிழாக்களும் நடக்கும் என்பதும், வெறுமையான நாள் அங்குக் காணமுடியாது என்பதனால் ''சாறுநாள் அல்லது வேறுநாள் அறியாது' என்றார் கச்சியப்பர்.

'பல்சிறப்பு' என்பது மூர்த்தி, தலம், தீர்த்தம் முதலிய சிறப்புக்கள் கொண்டமையாகும். கடவுளரில் முருகர் சிறந்துள்ளார்; மலைத்தலங்களில் தணிகைமலை சிறந்தது; தீர்த்தங்களுள் சரவணப்பொய்கை சிறந்துள்ளது.

தணிகைமலை முருகன் திருக்கோயில் கொண்டுள்ள சிறப்பினால் - புகழுடன் என்றும் நிலைத்து நிற்க வல்லது என்பதனால் ''நிலை பெறு தணிகை மலை'' என்றார் கச்சியப்ப முனிவர்.

★ ★ ★

# வாழ்த்தும் பாராட்டும்

தவத்திரு கச்சியப்ப முனிவர் இயற்றிய ''திருத் தணிகையாற்றுப்படை'' என்னும் நூலுக்கு இனிய முறையில் எளிய நடையில் தெளிவுரை ஆக்கிய பேராசிரியர் அவர்களுக்கும் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் சார்பிலும் அறங்காவலர் குழுவின் சார்பிலும், அச்சிட உதவிய திரு. N. ஹரிஹர முத்து பழனி, திரு. A.R. ஆறுமுகம், திரு. எஸ். ராமன் நாடார் அவர்களுக்கும் எமது நன்றியையும் பாராட்டையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் தணிகை முருகன், தணிகைமலை, தணிகைப் பதி ஆகியவற்றின் பழம்பெருமைகளையும் சிறப்பையும் தெளிவாக உணர்த்துகிறது.

முருகனடியார்களும் தமிழ்ப் பெருமக்களும் இந் நூலினை வாங்கிப் படித்துப் பயனுறுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

**ஏ.வி. நேதாஜி முதலியார்,**
தலைவர், அறங்காவலர் குழு.

*10 6-98,*
திருத்தணிகை.

அறங்காவலர்கள்:
**ஆ. சுப்பிரமணியன்,** பி.காம்.,
**ஆர். வெங்கடேசன்,**
**ப. வடிவேல்,**
**மு. நாகன்.**

உபயம்

1) N ஹரிஹர முத்து
பிரசாத ஸ்டால்,
பழனி.

2) A.R. ஆறுமுகம்
கைத்தறி துணி ஏற்றுமதியாளர்
டெக்ஸ்லூம் சென்டர், சென்னை.

3) எஸ். ராமன் நாடார்
டிம்பர் மர்ச்சண்ட், சென்னை.

